ஸ்ரீ: ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நாலாயிர திவ்யப்பிரபந்தங்களுக்குப்

பெரியவாச்சான்பிள்ளை வடக்குத்திருவீதிப்பிள்ளை

முதலான பூருவாசாரியர்கள் அருளிச்செய்த வியாக்கியானங்களிலிருந்து தொகுக்கப்பட்ட

ஐதிஹ்யங்களும் நிர்வாஹங்களுமடங்கிய மஹாநிதியான

# ஐதிஹ்ய நிர்வாஹ ரத்நமாலை.

ஆசிரியர்:

## ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.

[ஸ்ரீராமாநுஜ பத்ரிகையின் வெளியீடு.]

---


காஞ்சீபுரம் ஸ்ரீவேங்கடேச்வர அச்சகத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

கிடைக்குமிடம்:

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

P. B. ANNANGARACHARYA

Editor Granthamala, KANCHEEPURAM.

இதன் விலை 1 8 0

1953

ஸ்ரீ:
பெருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஐதிஹ்ய நிர்வாஹ ரத்நமாலா.

## ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் தொகுத்தது.

—:o:—

நாலாயிர திவ்யப்பிரபந்த வியாக்கியானங்களில் பலபல ஐதிஹ்யங்களும் நிர்வாஹங்களும் பெரியவாச்சான்பிள்ளை வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலான பூருவாசாரியர்களால் அருளிச் செய்யப்பட்டிருக்கின்றன. அவை விசேஷித்து அநுஸந்திக்கத் தக்கவையாய் அடிக்கடி மனனம் பண்ணத்தக்கவையா யிருப்பதால் அவை யெல்லாம் திரட்டி ஒருங்கே சேர்க்கப்படுகின்றன. திருப்பல்லாண்டு முதற்கொண்டு வியாக்கியானங்களிலுள்ள ஐதிஹ்யங்களும் நிர்வாஹங்களும் விசேஷித்த ஆசார்ய ஸ்ரீஸூக்தி மேற்கோள்களும் வரிசையாக எடுத்துக் கோக்கப்படுகின்றனவிதில். கதையோடு கூடிய அர்த்த விசேஷங்களை ஐதிஹ்யமென்றும், "இதற்கு ஆளவந்தாரருளிச் செய்யும்படி; இங்கு எம்பெருமானாரருளிச் செய்யுபடி; என்று பட்டரருளிச் செய்தார்" என்று காட்டும் அர்த்த விசேஷங்களை நிர்வாஹமென்றும் பெரியார் வழங்குவர். இவை யிரண்டும் இதிலேயடங்கும். விவரிக்க வேண்டிய அவச்யமுள்ள விடங்களில் விவரணமும் சிறிது செய்யப்படும். ... ... *

---

திருப்பல்லாண்டு 4 ஏடு நிலத்தில்

(ஏடுநிலத்தில்.) ஏடு என்பது பொல்லாங்கு. 'உங்களைப் பொல்லா நிலத்திலே யிடுவதற்கு முன்னம்' என்று பிள்ளையமுதனார்.

திருப்பல்லாண்டு 10 எந்நாளெம்பெருமான்.

(ஐந்தலையபைந்நாகத்தலைப்பாய்ந்தவனே!.) க்ருஷ்ணாவதாரமென்றால் ஆழ்வார்களெல்லாருமாகப் பரிவராயிருப்பர்கள்; இதுக்கடியென்? என்று ஜீயர் பட்டரைக் கேட்க; ராமாவதாரத்தில் பிள்ளைகள் தாங்கள் மிடுக்கராய் குணாதிகருமாய், பிதா சம்பராந்தகனுமாய், மந்த்ரிகள் வஸிஷ்டாதிகளுமாய், ஊர் அயோத்யையுமாய், காலம் நல்லடிக்காலமுமாயிருக்கையாலே அங்குத்தைக்கு ஒரு பயமில்லை; இங்கு, வந்துபிறந்தவிடம் சத்ருக்ருஹமாய், கம்ஸன் இடம்பார்த்து நலியும் துஷ்ப்ரக்ருதிகளை வரக்காட்டும் க்ரூரனுமாய், தமப்பன் இடையனுமாய், ஊர் இடைச்சேரியுமாய், பிள்ளைகள் தாங்கள் தீம்பருமாய், காலம் கலிகாலத்தோடு தோள் தீண்டியாயிருக்கையாலே என் வருகிறதோ வென்று பரிகைக்கு ஆழ்வார்களல்லதில்லைகாணும் என்றருளிச் செய்தார். ...

[குறிப்பு:—திருப்பாவை, 16. நாயகனாய்நின்ற பாசுரத்தின் வியாக்யானத்தில் (மூவாயிரப்படியிலும் ஆறாயிரப்படியிலும் இவ்விஷயம் ஐதிஹ்யமாகவல்லாமல் ஸ்வவாக்ய ரீதியில் அருளிச்செய்யப்பட்டுள்ளது.]

"த்ரேதாயுகமாகையாலே காலமும் நல்லடிக்காலமாய் தமப்பனார் சம்ப்ராந்தகனுமாய் பிள்ளைகள் தாங்களும் ஆண் புலிகளாய், அவர்கள் தாம் வழியேபோய் வழியே வருமவர்களுமாய் மந்த்ரிகள் வஸிஷ்டாதிகளாய், ஊரும் திருவயோத்யையாய் ............காலம் கலிக்குத் தோள்தீண்டியான த்வாபராந்தமாய், தகப்பனார் ஸாது ஸ்ரீநந்தகோபராவது, இவர்கள் சிறுபிள்ளைகளாவது, அதிலே தீம்பராவது, ஊர் இடைச்சேரியாவது, அதுதான் கம்ஸன்படைவீட்டுக்கு அடுத்தணித்தாய் அவனுக்கு இறையிறுக்கு மூராவது, கம்ஸன்தான் சத்ருவாவது, எழும் பூண்டெல்லாம் அஸுரமயமாவது; ஆனபின்பு பயம் கெட்டோ இருக்கிறது?" என்று.

## பெரியாழ்வார் திருமொழி 2—1. 1. மெச்சூது சங்கம்

(மணவாள மாமுனிகளின் வியாக்கியானம்.)

(அத்தூதனப்பூச்சி காட்டுகின்றான்.) இவ்விடத்தை உய்ந்தபிள்ளை (அ)ரையர் கோயில் திருவோலக்கத்திலே அத்தூதனென்று பெருமாளைக் காட்டுவது, அப்பூச்சி யென்று கண்ணை யிறுத்துக்கொண்டு வருவதாய் அபிநயிக்க, உடையவர், பின்னே ஸேவித்தெழுந்தருளியிருந்த எம்பார் திருக்கைகளைத் திருத்தோள்களோடு சேர்த்துக்காட்ட, அவரும் அப்படியே அபிநயித்துக் கொண்டுவர, 'இதுக்கடியென்?' என்று விசாரித்துப் பரிந்து பார்த்தருளி 'ஸ்ரீ கோவிந்தப் பெருமாள்! இருந்தீரோ?' என்றருளிச் செய்தாரென்று ப்ரஸித்தமிறே.

[விவரணம்;—இக்காலத்திலும் பாலலீலைகளில் (அப்) பூச்சி காட்டுகையென்று ஒன்றுண்டு. அதாவது, கண்ணையிறுத்துவது, மயிரால் முகத்தை மறைத்துக்காட்டுவது முதலாகச் செய்யும் பயங்கரமான சேஷ்டைகள். இப்பாசுரம் நம்பெருமாள் ஸன்னிதியில் சிறிய திருவத்யயநோத்ஸவத்தில் அரையர்ஸேவையில் வந்தபோது, உய்ந்தபிள்ளை என்னுமரையர் 'அத்தூத னப்பூச்சி காட்டுகின்றான்' என்றுமிடத்தை அபிநயித்துக் காட்டுகையில்; அத்தூதன் என்பதற்கு இலக்காக எதிரே யெழுந்தருளியிருக்கிற நம்பெருமாளைச் சுட்டிக்காட்டிவிட்டு அப்பூச்சிகாட்டுகின்றானென்பதற்கு கண்ணிமையை மடக்கி இக்காலத்துச் சிறுவர்கள் பூச்சி காட்டும்விதமாகவே அபிநயித்துக் காட்டினார். அந்த கோஷ்டியில் உடையவரும் அவர் பின்னே எம்பாரும் எழுந்தருளியிருந்தார்கள். அரையர் இப்படி அபிநயம் செய்வதைக் கண்ட எம்பார் கண்ணபிரான் அப்பூச்சி காட்டினவிதம் இதுவல்லவென்று, தாம் கொண்டதை அரையர்க்குத் தெரிவிப்பதற்காகத் தம்முடைய திருக்கைகளைத் தம்திருத்தோள்மேல் வைத்து ஸூசனையாகக் காட்டினார். சங்கு சக்கரங்களுடனே அவதரித்த கண்ணபிரான் *உபஸம்ஹர விச்வாத்மந் ரூபமேதச் சதுர்புஜம்* என்ற கோரிக்கையின்படி அப்போது மறைத்துக்கொண்ட சங்கு சக்கரங்களை ஆய்ச்சிறுமியர்க்கு அடிக்கடி காட்டி அச்சத்தை விளைவித்தானென்பதே அப்பூச்சிகாட்டுகின்றானென்பதற்குக் கருத்து என்பதை எம்பார் ஸூசனையாகத் தெரிவித்தபடி. இக்குறிப்பைத் தெரிந்துகொண்ட அரையர் தாம் முன்பு அபிநயித்த ரீதியை விட்டு எம்பார் காட்டியது போலவே அபிநயிக்க, உடையவர் மிகவுகந்து, முதலில் வேறுவிதமாக அபிநயித்த அரையர் இப்போது இவ்விதமாய் அபிநயித்ததற்குக் காரணம் எம்பாருடைய ஸூசனையாகவே யிருக்கவேணுமென்று கருதி திரும்பிப் பார்த்து எம்பாரே! இருக்கிறீரோ? என்றாராம். தூதனாய்த் தன் ஸௌலப்யத்தை வெளியிட்டதுபோல் மற்றும் பல பல ப்ரகாரங்களினால் தன் எளிமையை வெளியிட்டு இவன் நம்மிலே ஒருவன் என்று இவ்வுலகத்தவர் கொள்ளும்படி யிருப்பவனை கண்ணபிரான் சில ஸமயங்களில் அவர்கள் அஞ்சும்படி ஈச்வரத்வ சின்னங்களைக் காட்டுகிற

னென்பதே "அந்தாதனைப் பூச்சிகாட்டுகின்ருன்" என்கிறவிடத்திற்கு விவக்ஷிதம்—என்று விளக்கப் பட்டதாயிற்று.]

## பெரியாழ்வார் திருமொழி 3—6—3. வானிளவரசு.

(வானிளவரசு) திருவனந்தாழ்வான்மடியிலும் ஸ்ரீ ஸேனைபதியாழ்வான்... பின் கீழிலும் பெரிய திருவடி சிறகின்கீழிலுமாய்த்து இத்தத்வம் வளருவது... என்றிறே பட்டர் அருளிச் செய்வது.

## பெரியாழ்வார் திருமொழி 3—8—4. ஒருமகள் தன்னையுடையேன்

ஆழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளினபோது உடையவர், விச்லேஷம் பொறுக்க மாட்டாமல் "ஒருமகள் தன்னையுடையேன்" என்றும் "உலகம் நிறைந்த புகழால் திருமகள்போல வளர்த்தேன்" என்றும் "செங்கண்மால்தான்கொணடுபோனுன்" என்றும் அருளிச் செய்தா ரென்று ப்ரஸித்தமிறே. * உபமாநமசேஷாணும் ஸாதூநாம் யுஸ்ஸதாபவத் * என்கிறபடியே ஸாதுக்களுக் கெல்லாம் உபமாந பூமியாகச் சொல்லலாம்படியிருக்கையாலே உலகம் நிறைந்த புகழுள்ளது ஆழ்வானுக்கேயிறே.

## பெரியாழ்வார் திருமொழி 3—9. என்னாதன் - ப்ரவேசம்

* மானமரு மென்னேக்கி யென்கிற (பெரிய திருமொழி 11-5.) திருமொழியிலே இரண்டு பிராட்டிமார்தசை ஏககாலத்திலே கூடும்படி என்? என்று ஜீயர் பட்டரைக்கேட்க, தேசவிசேஷத்தில் அநேக சரீர பரிக்ரஹம் ஏககாலத்தில் கூடுகிறபடி யென்னனே? அப்படியே இவரையும் பார்த்து அருளினல் கூடும் என்றருளிச் செய்தா ரென்று ப்ரஸித்தமிறே.

## பெரியாழ்வார் திருமொழி 3-9-4 மாற்றுத்தாய் சென்று.

(கூற்றுத்தாய் சொல்ல.)..................முற்பட்டயோஜனை நாலூர்பிள்ளையிட்டருளின வ்யாக்யாந ப்ரக்ரியை. பிற்பட்டயோஜனை பிள்ளையிட்டருளின வ்யாக்யாந ப்ரக்ரியை. முற்பட்ட யோஜனையில் * சென்று வனம்போகே * என்கிறவிதுக்கு ஸ்வாரஸ்யம் ...... "தண்டகம் நூற்றவள் சொற்கொண்டுபோகி" என்றும் "குலக்குமரா காடுறையப்போ ...... "கொடிய வன்வாய்க் கடிய சொற்கேட்டு—கான்தொடுத்த நெறிபோகி" என்றும் கீழ்மேல் வெண்று விடைகொடுப்ப இலக்குமணன் தன்னெடுமங்கேபோ ...... நம்பிள்ளை ஸ்ரீபாதத்திலே கேட்ட நாலூர்பிள்ளையருளிச் செய்ததாகையாலே பிள்ளைக்குப் பரமாசார்யருமிறே. ஸார்த்தம் வித்திக்கையும், * கூற்றுத்தாய் சொல்லக் கொடியவனம்போனவிது "தண்ஸம்ப்ரதாயத்திலும் வந்தால், நம் அருளிச்செய்தவற்றுக்குச் சேர்ந்திருக்கையுமுண்டு. பல்யமுண்டு. அவர்தாம் ஆச்சான்பிள்ளை திருத்தமப்பனாராகையாலே பிள்ளைக்குப் வந்த ப்ரா ஆகையாலே அந்த யோஜனை முற்பட எழுதி பிள்ளையருளிச் செய்த யோஜனை பிற்பட எழுதப்பட்டது.

## பெரியாழ்வார் திருமொழி 4-1-4. தோயம்பரந்த.

(மாயக்குழவியதனை.) சிறுவடிவைக் கொண்டு பெரியலோகங்களை வயிற்றிலே வைத்து ஒரு பவனன ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின அகடிதகடநா ஸாமர்த்தியத்தால் வந்த ஆச்சர்யத்தையுடைய அந்த குழவியை. * முக்தச் சிசுர் வடதளே சயிதோஷிதங்வா தங்வா ஜகந்தி பிப்ருஷே ஸவகாஸமேவ, ஐசீமிமாந்து தவ சக்திமதர்க்கிதவ்யாம் அவ்யாஜத: ப்ரதயஸே கிமிஹாவதீர்ண:* என்றுரிறே ஆழ்வான்.

## பெரியாழ்வார் திருமொழி 4-1-9. நாழிகை கூறிட்டு.

(ஆழிகொண்டன்றிரவி மறைப்ப.) நிரவதிக தேஜோரூபமான திருவாழியாலே ஆதித்யனை மறைத்தால் லோகத்துக்கு மிகவும் வெளிச் செறிப்புண்டாமத்தனையன்றோ?

ஆதித்யன் அஸ்தமித்தா னென்னும்படி கண்களுக்கு இருண்டு தோற்றுமாவானென் னென்னில்; இந்த ஆதித்யனுடைய தேஜஸ்ஸு கண்ணாலே முகக்கலாம்படி அளவுபட் டிருக்கையாலே தமஸ்ஸு போம்படியாயிருக்கும்; அங்ஙனன்றிக்கே திருவாழியாழ்வா னுடைய தேஜஸ்ஸு நேர்கொடுநேர் கண்கொண்டு பார்க்க வொண்ணாதபடி மிக் கிருக்கையாலே பளபளத்துக் கண்ணையிருளப் பண்ணிற்று; இதுதான் "ஆழியாலன்றங் காழியை மறைத்தான்" (பெரிய திருமொழி 5—7—8) என்கிறவிடத்திலே பூர்வர்கள் அருளிச் செய்தார்களிறே.

[குறிப்பு: இங்கே பூர்வர்கள் என்றது பெரிய வாச்சான்பிள்ளையை. அவருடைய திவ்யப்ரபந்த வியாக்கியானங்களிலிருந்து எடுத்துக் காட்டுமிடங்களிலெங்கும் மணவாள மாமுனிகள் பூர்வர்கள் என்றே நிர்தேசித்தருள்வது ரஹஸ்யவியாக்கியானங்களிலும் பலவிடங்களிற் காணத்தக்கது. மிகவும் அவசியமாகத் திருநாமத்தைக் குறிப்பிட்டே யாகவேண்டிய நிர்ப்பந்தமுள்ள விடங்களில் மாத்திரமே பெரியவாச்சான்பிள்ளை யென்று நாம நிர்தேசம் செய்தருள்வது; உபதேச ரத்தினமாலையில் மூன்று பாசுரங்களிலும் தத்வத்ரய வியாக்கியானத்தில் ஓரிடத்திலும் அது காண்க.]

## பெரியாழ்வார் திருமொழி 4—2—5. கருவாரணம்.

(கருவாரணம்......திரியும்) அழகர் திவ்யாஜ்ஞைக்கு இளைத்து போகமாட்டா மல் மீளும். * ஸௌந்தரதோர் இவ்பாஜுராலயபாக (வங்கர) காதவைசாமுயாமிதி கரிணி, ப்ரணயஜகலஹஸமாதிர் யதர வனாத்தில ஸஞ்ஜை ஸௌந்தரரோஜ்ஞ; * என்று இந்த வ்ருத் தாந்தத்தையருளிச் செய்தாரிறே ஆழ்வான்.

## பெரியாழ்வார் திருமொழி 4—2—7. மன்னர் மறுக.

(கொன்னவில் கூர்வேல் கோனித்யாதி.) மலயத்வஜ சக்ரவர்த்தி திருமாலிருஞ் சோலைச் சிலம்பாற்றிலே நீராடி ப்ரவணனாயிருந்த புராணவரலாறு இங்கு விரிவாக அருளிச் செய்யப்பட்டிருப்பது காண்க.

## பெரியாழ்வார் திருமொழி 4—4—1. நாவகாரியம்.

(நாவகாரியஞ் சொல்லிலாதவர்.) கொங்கிலே திருக்குருகைப்பிரான் பிள்ளா னெழுந்தருளி ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் திருமாளிகையிலே விட்டவளவிலே பிறந்த வார்த் தையை ஸ்மரிப்பது அனந்தாழ்வான் சமயமயத்திலே பட்டர்க்குத் திருநாமமேது? என்று கேட்க, அழகிய மணவாளப் பெருமாளென்கிற திருநாமமென்று சொல்ல, இது பார்த்ரு நாமக்ரஹணம் பண்ணுமாபோலே யிராநின்றது; ஆகிலும் பட்டர் விரும்பின திருநாமமன்றோ வென்று இத்திருநாமத்தைச் சொன்னவனந்தரத்திலே திருநாட்டுக்குப் போனார். உடையவரெழுந்தருளியிருக்கிற காலத்திலே வடுகநம்பியருகே ஒரு ஸ்ரீ வைஷ்ணவரெழுந்தருளியிருந்து 'ஓம் நமோ நாராயணாய' என்று இதைச் சொல்ல, இத்தைக்கேட்ட வடுகநம்பி 'நாவகாரியம்' என்றெழுந்து கடக்கப்போனார். ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் சரம காலத்திலே உடையவரெழுந்தருளி இப்போது திருவுள்ளத்தில் அநுஸந்தானமேதென்று கேட்க, பகவந் நாமங்களாயிருப்பன அநே கம் திருநாமங்களுண்டாயிருக்க திருவரங்கம் என்கிற நாலெழுத்து திருவக்ஷரமும் கோப் புண்டபடியே! என்று நினைத்திருந்தேன் காணும் என்றருளிச்செய்ய, அத்தை ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் விரும்பின திருநாமமென்று உடையவர் விரும்பியிருப்பர்.

[குறிப்பு:—இவ்வைதிஹ்யங்கள் இங்கு அருளிச்செய்யப் ரஸக்தி யேதென்னில், மூலத்தில் 'நாஅகாரியம்' என்றுள்ளபடியால் நாவுக்குக் கார்யம் இன்னது, அகார்யம் இன்னது என்பதை விவரித்துக் காட்டுகிற முறையில் அருளிச்செய்யலாயின. நாவ காரிய மென்கிற இத்திருமொழியின் வியாக்கியானத்திற்காணும் ஐதிஹ்யங்கள் பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியானப் பகுதிகளென்று அரும்பதவுரைகாரர் காட்டியுள்ளார்.]

## பெரியாழ்வார் திருமொழி 4—4. 7. இருந்த மென்று.

(இருந்த வூரிலிருக்கும் மானிடர்) ஆழ்வானுக்கு, ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் திருவடிச் சார்ந்தாரென்று விண்ணப்பஞ்செய்ய, பாகவத கைங்கர்யமே யாத்ரையாய்ப் போந்தவரை அப்படிச் சொல்லலாகாது; திருநாட்டுக்குப் போனாரென்று சொல்லவேணுங் காணுமென்றருளிச் செய்தாராம். ஸ்ரீவைஷ்ணவர்களை நாட்டு வென்றும் ஆசார்யனை திருவுடைழமுடையண வென்றும் சொல்லுகிறது உத்தேச்யதாரதம்யத்தையிட்டிறே. விடுகையில் திருநாட்டுக்குப் போனாரென்று ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அருளாளப் பெருமாளெம்பெருமானார்க்கு விண்ணப்பஞ் செய்ய, சிறிதுபோது மோஹித்துக் கிடந்து உணர்ந்தருளி அவரைப் பார்த்து, திருநாட்டுக்குப் போனாரென்னலாகாது காணும்; உடையவர் ஸ்ரீபாதத்துக்குப் போனாரென்ன வேணுங்காணும் என்றருளிச் செய்தாராம். ஸ்ரீசபரியும் பெருமாள் திருவடிகளிலே ப்ராத்தித்தது இதுவிறே. ஆழ்வான் ஸம்ஸாரத்தில் ஆர்த்தியின் கனத்தாலே கலங்கிப் பெருமாள் திருவடிகளிலே, அடியேனைத் திருநாடேறப் போம்படி திருவுள்ளமாகவேணுமென்று விண்ணப்பஞ் செய்ய, பெருமாள் திருவுள்ளமாய் ஆழ்வார்திருவரங்கப் பெருமாளரையர் திருமாளிகையிலே புறவீடு விட்டிருக்கிற வளவிலே இத்தை உடையவர் கேட்டருளி, பஞ்சக்கொட்டன் திருவாசலளவாக வெழுந்தருளி பெருமாளுக்கு விண்ணப்பஞ் செய்தால் விண்ணப்பஞ்செய்தது பெருமாளுஞ் செய்தருளுவர்; நாமடியாகப் பெருமாள் இரண்டு வார்த்தை யருளிச்செய்தாராக வொண்ணுமோதென்று மீண்டும் ஆழ்வானிருக்கிறவிடத்தேற வெழுந்தருளி 'ஏன் ஆழ்வான்!' என்ன, அடியேன் மறந்தேனென்று விண்ணப்பஞ் செய்தான்.

## பெரியாழ்வார் திருமொழி 4—4—9. கொம்பினார் பொழில்.

(கம்பனை நரசிங்கனை) எம்பார் அருளிச்செய்யும் வார்த்தை—ஈச்வரனுக்கு மூன்று ஆபத்து வந்து கழிந்ததென்று அருளிச் செய்வர். அதாவது—த்ரௌபதிக்கும் ஸ்ரீகஜேந்திராழ்வானுக்கும் ஸ்ரீ ப்ரஹ்லாதனுக்கும் உதவிற்றிலனாகில் ஸம்ஸாரிகள் ஈச்வரத்வமில்லையென்றெழுதியெழுத்திடுவர்களிறே.

## பெரியாழ்வார் திருமொழி 4—6—4 உச்சியிலெண்ணெயும்.

(எம்பிரான் திருநாமமே நச்சுமின்) ஒரு ப்ராஹ்மணன் தன் பிள்ளையைப் பேரிடுகிற ஸமயத்திலே ஐச்வர்யம் தரவல்லானொருவன்பேரிடவேணுமென்ன, வைச்ரவணன் பேரையிடு என்றவளவிலே ஐளிபிளி என்று இட்டழைத்து ஜீவிப்பதில் நாராயணன் என்கிற திருநாமத்தைச்சாற்றி பிக்ஷைபுக்கு ஜீவிக்க வமையுமென்றானென்று ஆசான் பிள்ளையருளிச்செய்ததாகப் பிள்ளையருளிச்செய்வர்.

(விவரணம்:—அமரகோசத்தில் குபேரனுடைய நாமங்களைக் கூறிவருமிடத்து * யக்ஷைக பிங்கைலபில ஸ்ரீத புண்யஜநேச்வரா: * என்று 'ஏலபில:' என்பதும் குபேர நாமமாகக் கூறப்பட்டுள்ளது. ஏலபிலனுடைய மகன் என்கிற பொருளில் 'ஐலபிலி:' என்றாகும். இந்த விவக்ஷையாலே ஐளிபிளி யென்று பெயரிட விரும்பினபடி.)

## பெரியாழ்வார் திருமொழி 4—8—8 வல்லெயிற்றுக்கேழலுமாய்

(கேழலுமாய்) வராஹகல்பம் வாசியா நிற்கச்செய்தே, ஸ்ரீ வராஹநாயனார்க்கு முத்தக்காசை அமுதுசெய்விப்பதென்று கிடந்ததாய் இதென்ன மெய்ப்பாடுதானென்று நஞ்சீயர் வித்தராயருளுவரென்று ப்ரஸித்தமிறே.

(விவரணம்;—முத்தக்காசு என்பது கோரைக்கிழங்கு. முஸ்தா என்பது ஸம்ஸ்க்ருத நாமம். வராஹப்பெருமாளுக்கு அர்ச்சையில் முஸ்தாசூர்ண மமுதுசெய்யப் பண்ணும்படி சாஸ்த்ரவிதியிருப்பதோடு ஸ்ரீமுஷ்ணம்முதலான வராஹ க்ஷேத்திரங்களில் அநாதியான அனுஷ்டானமுமுண்டு.)

பெரியாழ்வார் திருமொழி 4—9—3, கருளுடையபொழில்.

(அணியரங்கமே.) பிள்ளை திருநறையூரரையரும் பட்டரும் ப்ரதக்ஷிணம் பண்ணா நிற்கப் பின்னே ஸேவித்துக்கொண்டுபோனேன்; அல்லாதாரெல்லாரும் கடுங்குதிரை போலே வாரா நிற்க, இவர்கள் திருக்கோபுரங்களையும் திருமாளிகைகளையும் கண்ணாலே பருகுவாரைப்போலே பார்த்து மகிழ்ந்துகொண்டு வருகிறபடியைக்கண்டு, அல்லாதார்க்கும் இவர்களுக்கும் செயலொத்திருக்க இவர்களான வாசிதோற்ற விருந்தபடியென்! என்றிருந்தேன்காணுமென்று நஞ்சீயர் நம்பிள்ளைக்கருளிச் செய்தாரென்று ப்ரஸித்தமிறே.

பெரியாழ்வார் திருமொழி 4—9—6 மைத்துனன்மார் காதலியை.

(மயிர் முடிப்பித்து) * இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாமி * என்ற வோபாதி * இதம் தே நாதபஸ்காய * என்கிற விதுவும் முன்னே சொல்லிக் கொள்ளவிறேயடுப்பது; அங்ஙன் செய்யாதே முந்துற அர்த்தத்தை யருளிச் செய்துவைத்துப் பின்னை இத்தை யருளிச் செய்வானேன்? என்று ஜீயர் பட்டரைக் கேட்க, த்ரௌபதி குழல் விரித்துக் கிடக்கையாலே செய்வதறியாமல் மூலையிலே கிடந்தாரை முற்றத்திலே யிடுவாரைப் போலே பரம ரஹஸ்ய மானத்தை வெளியிட்டுக்கொண்டு நின்றான்; பின்னை அர்த்தத்தின் சீர்மையை அநுஸந்தியா, கைப்பட்ட மாணிக்கத்தைக் கடலிலே போகட்டோமென்று பதண்பதென்றான் காணும் என்றிறேயருளிச் செய்தது

பெரியாழ்வார் திருமொழி 4—10—10 மாயவனை மதுசூதனனை.

(மறையோர்களேத்தும்) மேன்மைக்கு அமரரேறு என்னுமாபோலேயிறே நீர்மைக்கு ஆயர்களேறென்கிறவிது. பெரிய பெருமாளை க்ருஷ்ணாவதாரமாகவிறே நம் பூர்வாசார்யர்கள் அநுஸந்திப்பது. * கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெ யுண்டவாயன் என்னுள்ளங் கவர்ந்தானை * என்றாரிறே திருப்பாணாழ்வார். திருப்பவளத்தை மோந்து பார்த்தால் இப்போதும் வெண்ணெய் மணக்குமாய்த்து. * கூர்மவ்யாக்ரநகபரிஷ்லத்பஞ்சஹேதி யசோதாநந்தா மோக்ஷ்யபாணமதிகம் நஸ் ஸமாதிம் திநோதி * என்று-யசோதைப்பிராட்டி பிள்ளைப் பாணியாகச் சாத்தின திருவாபரணம் இப்போதும் பெரிய பெருமாள் திருக்கழுத்திலே கிடக்கிறதென்று கண்டநுபவித்தாரிறே பட்டர். ஆகையால் இவ்விடத்தில் * மறையோர்களென்கிறது - திருப்பாணாழ்வார் பட்டர் போல்வாரானவர்களை.

பெரியாழ்வார் திருமொழி 5—2—4 மங்கிய வல்வினை.

(இங்குப்புகேல்மின்.) இங்கு என்று திருப்பல்லாண்டோடே அந்வயமுடையாரெல்லாரையும் கூட்டிக் கொள்ளுகிறதென்று பட்டர்.

பெரியாழ்வார் திருமொழி 5—4—3 எம்மனாவென்குல.

(எம்மனா இத்யாதி.) எம்மனா, என்குல தெய்வமே, என்னுடைய நாயகனே! என்கிற இம்மூன்றாலும்—ஜ்ஞாநவிரோதியும் ஆச்ரயண விரோதியும் மோக்ஷ விரோதியும் போனபடி யென்று ஆளவந்தார். தேஹாத்மாபிமாநமும் அந்யசேஷத்வமும் ஸ்வஸ்வாதந்த்ர்யமுங் கழிந்தபடி யென்று உடையவர். உபாயமும் உபேயமும் பரதேவதையும் என்றுமாம்.

அப்பாட்டிலேயே, (நறுகள்பாய்ந்தனவே) நறு என்கிறது ஸம்ஸாரிகளையென்று திருக்கோட்டியூர்நம்பியருளிச் செய்வர்.

## பெரியாழ்வார் திருமொழி 5—4—4 கடல்கடைந்தமுதம்.

(நிறைத்துக் கொண்டேன்) * நெஞ்சிடிந்துகுமென்று நெஞ்சமழிந்து, உடலுருகுமென்று இட்டகரையுமழிந்து ஸ்வரூபமும் அளவுபட்டிருக்க, இவர் தேக்கிக் கொண்டபடி எங்ஙனேயென்று ஜீயர் பட்டரைக் கேட்க, * விட்டுசித்தன்மனமென்று அவ்வம்ருதம் வியாபித்தவிடமெல்லாம் திருவுள்ளம் வ்யாபிக்குமென்று அருளிச்செய்தார்.

## பெரியாழ்வார் திருமொழி 5—4—11 வேயர்தங்களு

(சாயைபோலப்பாட வல்லார் தாமுமணுக்கர்களே) எம்பாரைச்சிலர் இப்பாட்டுக்குப் பொருளென்? என்று கேட்க, நான் உடையவர் ஸ்ரீபாதத்திலே இது கேட்டிலேன்; ஆகிலும் நீங்கள் கேட்டவர்த்தம் போராதென்னவொண்ணாது; இப்போதே கேட்டு உங்களுக்குச் சொல்லவொண்ணாதபடி உடையவரும் திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்தேறவெழுந்தருளினார்; ஆகிலும் உங்களுக்கு இப்போதே சொன்னேனாகவேணும்.... என்று உடையவர் திருவடி நிலைகளை யெடுத்துத் தம்திருமுடியிலே வைத்துக்கொண்டு, "இப்போது உடையவரெனக்கருளிச் செய்தார், கேட்கலாகாதோவென்று "பாடவல்லார், [illegible]யைபோல தாமும் அணுக்கர்களே" என்றருளிச்செய்தார்..........சாயைபோலப் பாடவல்லார்; நிழலாவது குளிர்த்தி; குளிரப் பாடவல்லார் என்றுஞ் சொல்லுவர்கள்.

[விவரணம்;—பண்டு எம்பெருமானார் திருக்கோட்டியூர் நம்பியைத் திருவடி தொழுவதற்கென்று அங்கு எழுந்தருளின காலத்தில் சிலர் எம்பாரிடம் வந்து "சாயை போலப் பாடவல்லார்" என்ற அடியின் கருத்தையருளிச் செய்யவேணுமென்று பிரார்த்திக்க, அதற்கு எம்பார் 'நான் எம்பெருமானாரிடத்தில் இதன் பொருளைக் கேட்டுணர்ந்ததில்லை; இப்போது அவரைக் கேட்டு உங்களுக்குச் சொல்லுவோமென்று பார்த்தால் அவர் திருக்கோட்டியூருக்கு எழுந்தருளியிருக்கிறார்; இதன் பொருள் எனக்குத் தெரியாதென்று சொல்லிவிடுவது அழகல்ல. உங்களுக்கு இப்போதே சொன்னேனாக வேணும்; சொல்லுகிறேன்; அதற்கொரு உபாயமுண்டு—என்று சொல்லிவிட்டு உடனே எம்பெருமானாருடைய ஸ்ரீ பாதுகைகளை யெடுத்துத் தம்முடிமீது வைத்துக்கொண்டு 'இப்போது ஸ்வாமிக்ருபையினாலே தெரிந்து கொள்ளப்பெற்றேன், சொல்லுகேன் கேண்மின்' என்று சொல்லத்தொடங்கி "அந்தணர்தமமுதத்தினைப் பாடவல்லார் சாயைபோல அணுக்கர்கள்" என்று அந்வயித்துப் பொருள் விளக்கியருளினர். தம்முடை[illegible] நிழல் தம்மைவிட்டு அகலாதவாறுபோல எம்பெருமானைப் பாடுமவர்கள் அப்பெருமானை விட்டு இறையும் அகலாது அவன்றனக்கே அத்தாணிச் சேவகராகப் பெறுவர்—என்று பொருள் விளக்கினபடி. இங்ஙனம், சாயைபோல எனபதை அணுக்கர்களே என்பதோடு கொண்டு கூட்டாமல் உள்ளபடியே அந்வயித்து, சாயைபோலப் பாடுகையாவது குளிரப்பாடுகை என்று நிர்வஹிப்பதுமுண்டு என்றதாயிற்று. ... ... ...

**ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலையில் பெரியாழ்வார்**
**திருமொழிவியாக்யான ஸங்க்ரஹம் முற்றிற்று.**

---

## திருப்பாவை 1 மார்கழித்திங்கள்

(கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன்) [மூவாயிரப்படி.] ஸ்ரீநந்த கோபர் முன்பு பசும்புல் சாவமிதியாதவராய்த்து; தம் சிறியாத்தாளைப்போலே ஆந்ருசம்ஸ்யப்ரதானராயாய்த்துப்போருவது; பிள்ளைகள் பிறந்தபின்பு அவர்கள் மேலுண்டான வாத்ஸல்யத்தாலே அவர்களுக்கு என்வருகின்றதோவென்றஞ்சி வேலைப் புகரெழக்கடைந்து பிடிக்கத் தொடங்கினார்.

அப்பாட்டிலேயே, (இளஞ்சிங்கம்) சிங்கக்குருகு என்று பட்டரருளிச் செய்வர்.

(ஆறாயிரப்படி.)

(மதிள்நிறைந்த)......பிக்ஷுக்குக்கள் வாசல் ஆர்த்தர்கட்டணமாய்க் கிடக்குமா போலே ஸ்ரீநந்தகோபர்வாசல் கருஷ்ணனாலே புண்பட்ட பெண்கள் கட்டணமாய்க் கிடக்குமாய்க் கொள்ளீரென்று பட்டர்.

(நீராட) பட்டர் ஸ்ரீபாததத்தைக் கழுவித் தீர்த்தங்கொள்ளும் ஆண்டாள். (விவரணம்—ஆண்டாளென்றது கூரத்தாழ்வான் தேவியார்திருநாமம்; பட்டருடைய திருத்தாயாரென்க.)

எம்பெருமானாரும் ஸ்ரீ வைஷ்ணவர்களுமெழுந்தருளா நிற்கப் பெரியநம்பி தெண்டனிட்டுக்கிடந்தார்: நம்மை இங்ஙனே செய்தருளிற்றென்? என்று கேட்க, ஆளவந்தாரெழுந்தருளுகிறாரென்றிருந்தேன் என்றருளிச் செய்தார்.

(கூர்வேல் கொடுந்தொழிலன்) நமக்கு அவனை நோக்கித்கருமவனைச் சொல்லுங்கோ ளென்கிறார்கள். சிறியாத்தானைப்போலே பசும்புல் சாவமிதியாதவர் பிள்ளைபிறந்தவாறே வேலைப் புகரெழக் கடைய விட்டாராய்த்து.

(இளஞ்சிங்கம்) சிங்கக் குருகு என்று ஆழ்வான் வார்த்தை.

## திருப்பாவை 2. வையத்துவாழ்வீர்காள்.

ஆறாயிரப்படி. (வையத்துவாழ்வீர்காள்)......இப்படி வ்யதிரேகத்தில் முடியும்படியானவன் [தசரத சக்ரவர்த்தி] மோக்ஷம் பெறுதொழிவானென்? என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்க; இவனுக்குள்ளது நரகமே; பெருமாளாந்ருசம்ஸ்யத்தாலே ஸ்வர்க்கஸ்தனானான் என்றருளிச் செய்தார்.

[குறிப்பு;—தசரத சக்ரவர்த்தியானவன் ஸத்யஸந்தனென்று பேர்படைத்தாலும், ஆபாஸமான ஸத்ய தர்மத்தைப் பற்றிநின்று, இராமபிரானோடு கூடிவாழ்தலாகிற பெரும் பேற்றையிழந்தனன். கைகேயிக்கு என்றைக்கோ கொடுத்திருந்த வரத்தை நிறைவேற்றுவிடில் பொய் சொன்ன பாவத்திற்காக நரகம் வந்துவிடுமே யென்று அஞ்சினான் தசரதன்; * யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ நிரயோ யஸ் த்வயா விநா * என்று அந்த ஸ்ரீ ராமாயணத்திலே யுள்ள ஸித்தாந்தப்படி இராமபிரானை விட்டுப்பிரிவதே நரகம், அவனோடு கூடியிருப்பதே ஸ்வர்க்கம் என்று உண்டாகவேண்டிய பிரதிபத்தி அத்தயரதனுக்கு அடியோடு உண்டாகவில்லை. ததிபாண்டன் கண்ணனை மறைத்திட்டு வைத்து யசோதையிடம் உன் மகன் இங்கில்லை யென்று பொய் சொல்லி மோக்ஷம் பெற்று விட்டான்; தசரதன் ஸத்யமே நடத்தியும் ஸித்ததர்மத்தைக் கைவிட்டு ஆபாஸதர்மரக்ஷணத்தில் ஊன்றினபடியாலே இழந்தான். முமுக்ஷுப்படியில் சரமச்லோகப்ரகரணத்தில் "சக்ரவர்த்தியைப் போலே இழக்கைக்கு உறுப்பு" என்றருளிச் செய்ததும் இங்கே அநுஸந்தேயம்.]

(ஆறாயிரப்படி.) (செய்யாதன செய்யோம்) ஆழ்வான் 'எங்கள் பூர்வர்கள் தேவதாந்தர பஜனம் பண்ணுமையாலே' என்றானும்.

(முக்கியமான பிழைதிருத்தமொன்று. * பாற்கடலுள் பையத் துயின்ற * என்றவிடத்து ஆறாயிரப்படியில் "ஜகத்ரக்ஷணசிந்தையிலே அவகாஹிதனை" எனவுள்ளது. மேலேயும் "ஆராலே ஆருக்கு என்ன நலிவு வருகிறதோ வென்று அதிலே அவகாஹிதனைக் கொண்டு சாய்ந்தபடி—என்றுள்ளது. இரண்டிடத்திலும் 'அவகாஹிதனை' என்றது அச்சுப்பிழை: அவஹிதனை என்பதே சுத்தபாடம். வடமொழியில் அவகாஹிதனையென்ற சொல்வடிவம் கிடையாது.)

## திருப்பாவை 3 ஓங்கியுலகளந்த.

(ஆறாயிரப்படி. (ஓங்கி)......ஸ்ரீ வைகுண்டத்திலிருக்கும்போது ஸம்ஸாரிகளுடைய இழவுக்குத் திருவுள்ளம் நொந்திருக்கு மென்று பட்டரருளிச் செய்ய, சில

அத்தைக்கேட்டு "அவாப்தஸமஸ்தகாமனாய் நிரதிசயாநந்த யுக்தனாயிருக்கிற ஸர்வேச்வரனுக்கு ஓரிழவுண்டோ திருவுள்ளத்தில்?" என்ன, * வ்யஸநேஷு மநுஷ்யாணாமென்கிறது குணப்ரகரணமோ தோஷப்ரகரணமோ? என்றருளிச் செய்தார்.........

மாறனேரியிலே ராமாநுஜதாஸனென்பாரொருத்தர் அவன் வருகிறபடியைக் கண்டு கடக்கப் போவென்பதே! நாலடி விலங்கிப்போதல், இல்லையாகில் ஒரு முழுக்கிட்டுக் கொள்ளுதல் செய்யவன்றோவடுப்பது என்ன; சண்டாளனேயாகிலும் அவன் ஆராதனை ஸமயத்தில் அலவாதார் விலங்கிப்போவார்; தவிஜனாகில் அவன் விலங்குவானென்று விதி விசேஷித்த அம்சம் அழிந்ததேயென்று அவர் சொல்ல, கெடுவீர்காள் விதிபூர்வகமாயோ க்ருபையிருப்பது! என்றருளிச் செய்தார்.

[விவரணம்:—மாறனேரி யென்கிற வூரிலே ஒரு ஸ்வாமி நடந்து சென்றுகொண்டிருக்கையில் எதிரே ஒரு பஞ்சமன் வந்தான்; அவன் தீண்டாதானாகையாலே இந்த ஸ்வாமியானவர் அவனை விலகிப்போம்படி அதட்டுகிறார். அவன் இந்த ஸ்வாமியை விலகிப்போம்படி சொல்லுகிறான்; ஒருவரும் விலகாமல் இப்படியே விவாதம் வளர்ந்து கொண்டிருக்கையில், அங்கு அருகேயிருந்த வொரு ஸ்வாமியானவர் விவாதப்படுகிற ஸ்வாமியை நோக்கி 'அவனோடு எதற்காக இவ்வளவு விவாதம்? தேவரீரே விலகிப் போனாலென்ன? விலகிப்போக இடமில்லையாகில் கண்ணைமூடிக்கொண்டு போய்விட்டு ஒரு முழுக்கிட்டுக் கொள்ளலாகாதோ?' என்றாராம். அதற்கு அவர், 'தேவரீர் சொல்லுவது உண்மையே; எதிரே வருகிற பஞ்சமன் தலையில் விறகு சுமை முதலான பாரங்களைச் சுமந்து வந்தானாகில் அப்போது அந்தணன் விலகிப்போகக்கடவனென்றும், பஞ்சமன் தலைச்சுமையொன்றுமின்றிக்கே கை வீசி வருபவனாயிருந்தால் அந்தணனை விலகிப்போகச் சொல்லாமல் அவன்றானே விலகிப்போகக் கடவனென்றும் சாஸ்திரக் கட்டளையிருக்கிறதே; அப்படியிருக்க, இப்போது தலைச்சுமை யொன்றுமின்றியே வருபவனான இந்த பஞ்சமன் தான் விலகிப்போகாமல் என்னை ஏதுக்கு விலகச் சொல்லுகிறான்? என்று பிணங்கினாராம் அதன்மேல் அந்த மத்யஸ்த ஸ்வாமி ஸாதித்த வார்த்தை;—ஸ்வாமிந்! தேவரீர் சொல்லுகிற சாஸ்த்ரார்த்தம் யதார்த்தமே; அதில் குறையொன்றுமில்லை; ப்ரக்ருதம் சாஸ்த்ரத்தைக் கொண்டு விவாதப்படுவானேன்? கருணையினாலே தேவரீர் விலகிப் போனால் இதை சாஸ்த்ரம் தடுக்குமோ? என்று.] இந்த ஐதிஹ்யத்திற்கு வேறுவிதமாகவும் பொருள் கூறுவாருளர்.

## திருப்பாவை 4. ஆழிமழை. (அவதாரிகை)

(ஆறாயிரப்படி.) "த்ரவந்தி தைத்யா: ப்ரணமந்தி தேவதா:" என்கிறபடியே பகவத்ஸமாச்ரயணம் பண்ணுவார்க்கு தேவதைகள் வந்து குடநீர்வார்க்கக் கடவிறே. "அதைதான் ஸ்ரீ வைஷ்ணவர்களை அநுவர்த்தியாதொழிவதென்? என்று கேளாய்" என்று ஆழ்வான்.

[விவரணம்;—ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கண்டு அசுரர்கள் அஞ்சி நடுங்கியோடுவதாகவும் தேவர்கள் அர்க்யபாத்யாசமநீயங்கள் ஸமர்ப்பித்து வழிபடுவதாகவும் சாஸ்த்ரம் சொல்லிற்று; இங்கே கூரத்தாழ்வான் ஸாதிப்பது—அசுரர்கள் அஞ்சி யோடுவானேன்? தேவர்களைப்போலே இவர்களும் வந்து வணங்கி வழிபாடுகள் செய்து உஜ்ஜீவித்துப் போகலாகாதோ என்று.]

அப்பாட்டிலேயே, "ஆழிமுதல்வனுருவம்போல்" என்றவிடத்து ஆறாயிரப்படியில் "நாச்சியார்விழிவிழிக்க வொண்ணாதாப்போலே" என்றுள்ளது. "நாச்சியார் விழிவிழிக்க வொண்ணாதென்றாப்போலே" என்றும் சில ஸ்ரீ கோசங்களில் பாடங்காண்கிறது. இரண்டு வகையான பாடத்திலும் ஓர் ஐதிஹ்யம் கர்ப்பிதம். அதாவது,

திருவரங்கம் பெரிய கோயிலில் பகற்பத்து முடிவுநாளிரவு ஸ்ரீ ரங்கநாதன் நாச்சியார் திருக்கோலம்பூண்டு ஸேவைஸாதித்தருள, பட்டர் எழுந்தருளி மங்களாசாஸனம் செய்யும்போது பெருமாளை நோக்கி "தேவரீர் நாச்சியாருடைய வேஷத்தை ஏறிட்டுக்கொண்டு இத்தனையொழிய அவள்போல் விழிவிழிக்க உம்மாலாகாதே" என்றாராம்.

### திருப்பாவை. 5. மாயனைமன்னு (ஆறாயிரப்படி)

(துறைவன்.) கம்ஸ பயத்துக்கு அஞ்சி ஒளிக்க வைத்த ஸோதரைச் சொல்லுமா போலே சொன்னபடி பாரீர் என்று பட்டர்.

(குறிப்பு:—மேலே "கம்ஸபயத்துக்கு அஞ்சி" என்ற விடத்தில் 'கம்ஸனபயத்துக்கு அஞ்சி' என்பது சுத்த பாடமென்பர் பெரியோர்.)

அவ்விடத்திலேயே, (தாமோதரனை.) பண்களிலே தாவினவாறே உடைகுழுவத் தழும்புகண்டு இடைச்சிகள் சிரித்தார்கள்; அத்தழும்பு தோன்றாமைக்கிறே நம்பெருமாள் கனையம்மேல்சாத்து சாத்துகிறது என்று ஜீயர்.

### திருப்பாவை பா. 6. புள்ளும்சிலம்பினகாண்.

(மூவாயிரப்படி.) (புள்ளும்சிலம்பினகாண்) இவ்விடத்திலே பிள்ளைப்பிள்ளையாழ்வான் பகவத்ஸமாச்ரயணத்துக்கு அநுகூலமான காலத்தை ஸூசிப்பிக்கிற பக்ஷிநாதமல்லது இவ்வாத்மாவுக்கு உத்தேச்யமில்லை யென்று பணிக்குமென்றருளிச்செய்வர்.

அப்பாட்டிலேயே (பிள்ளாய் என்ற விடத்து, மூவாயிரப்படியில்)—பட்டர், திருவாய்ப்பாடியிலுள்ளாரில் சிந்தயந்தியோபாதி க்ருஷ்ணஸம்ச்லேஷத்தில் புதியாரில்லை என்றருளிச்செய்வர்.

(குறிப்பு:—க்ருஷ்ணாவதாரத்தில் ராஸக்ரீடா ஸமயத்தில் திருக்குழலோசையைக் கேட்ட ஆயர்மாதர் ஸ்ரீ பிருந்தாவனத்தேறப்போகப் புறப்பட்டவளவிலே மாமியார் மாமனார்களது கட்டளையை மீறிபபோவார் சிலரும் அதற்கு அடங்கியிருப்பார் சிலருமாயிருக்க, ஓர் ஆய்ப்பெண் மாமனாரை மீறிப்போகமாட்டாமல் உள்ளடங்கி நின்று அந்த வேணுகான கோஷ்டியிலேயே தான் கலந்திருப்பதாகப் பாவனை முற்றிக் கண்ணபிரானைத தியானம பண்ணி அவனிடத்தே நெஞ்சு பதிந்திருக்கையாலே வந்த நிர்மலஸுகத்தாலும், உண்மையில் அவனைக் கிட்டப்பெறாமையாலுண்டான அளவற்ற துக்கத்தாலும் ஸகலபுண்ய பாபங்களும் கழியப்பெற்று அவனைப்பெறாது தரிக்கமாட்டாமல் மூச்சடங்கி அவளுடைய தேஹமும் தன்னடையே வீடுபெற்றது. இந்த ஆய்ப்பெண்ணுக்கு ஒரு பெயர் கூறப்படவில்லை; அவளைப்பற்றி ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் சொல்லப்புக்க விடத்தில் "காசித்" என்று தொடங்கி "சிந்தயந்தீ ஜகத்ஸூதிம் பரப்ரஹ்மஸ்வரூபிணம், நிருச்ச்வாஸதயா முக்திம் கதாந்யா கோபகந்யகா" என்று கூறப்பட்டிருந்ததால் 'சிந்தயந்தீ' என்ற குணநாமத்தால் இவளை நம் பூருவாசாரியர்கள் வியபதேசித்தருளினர். இவ்விடைப்பெண் "எங்கும் காவலுங் கடந்து கயிறு மாலையாகி வந்து கவிழ்ந்து நின்றனரே" என்றபடி காவல் கடந்து போகமாட்டாமே மாமியார் மாமனார்களைக் கண்டு திடுக்கிட்டு நிற்கும்படியாலே இவள் கிருஷ்ணனிடத்து ஈடுபாட்டில் புதியள் என்பர் பட்டர். பழகியிருந்தால் தேங்காதே போகத் துணிந்திருப்பாளன்றோ.)

### திருப்பாவை 7 கீசுகீசு— அவதாரிகை

(ஆறாயிரப்படி.) ஆட்கொண்டவில்லி ஜீயர் எழுந்தருளா நிற்கச் செய்தே ஒருத்தியர் தெண்டனிட்டு நிற்க, 'பகவத் விஷயத்தில் ருசி நமக்கு மெய்யாகப் பிறந்ததில்லைகாணும்' என்றருளிச்செய்ய, 'உம்மைப்போலே ஆசார்யவான்களுண்டோ? இங்ஙனே

யருளிச்செய்வதேன் ?" என்ன ; , பகவத் விஷயத்திலே மெய்யே ருசியுண்டென்றிருக்கை யாவது-பாகவதர்களைக் கண்டால் உகக்குமன்று காணும்' என்றருளிச் செய்தார்.

(குறிப்பு ;—ஆட்கொண்டவில்லி ஜீயரென்பவர் எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயித்தவர்களில் ஒருவர் ; அவர் நஞ்சீயர் காலத்திலும் எழுந்தருளியிருந்தார். அவர் ஒரு நாள் நம்பெருமாளை மங்களசாஸனம் செய்துவிட்டுத் திரும்புகையில் நஞ்சீயர் அவரைத் தெண்டனிட்டு நல்வார்த்தை கேட்டருளுகையில, "எம்பெருமான் திறத்தில் நமக்கு மெய்யான ருசி உண்டாகவில்லையே" என்று அவர் குறையுடன் பணித்தாராம். அதைக் கேட்டு நஞ்சீயர், 'தேவரீரும் இப்படி ஸாதிக்கலாமோ? ஸாக்ஷாத் எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயிக்கும் பாக்கியம் பெற்ற தேவரீருக்கு பகவத் விஷயத்தில் மெய்யான ருசி யில்லை என்னப்போமோ ?" என்றாராம். அதற்கு அவர் அருளிய மறுமாற்றம்—'நாம் எம்பெருமான் ஸன்னிதிக்குப் போய்வருகிறோம் ; அப்பெருமானை ஸேவித்து வருகிறோம், அவனது வடிவழகிலீடுபட்டுக் கண்ணீர் பெருக்குகிறோம் என்பதெல்லாம் வாஸ்தவமே ; பாகவதர்களைக்கண்டால் நிலாத்தென்றல் சந்தனம் புஷ்பம் முதலானவற்றைக் கண்டாற்போல் உகந்திருக்கப் பெற்றாலன்றோ பகவான் திறத்தில் நமக்கு உண்மையான ருசி யுண்டாகப் பெற்றதாவது ; அது இல்லையே ! ஆதலால் சொன்னேன்' என்று. இதனால் பாகவதர்கள் விஷயத்தில் ப்ரதிபத்தியுண்டாவது மிகவுமரிது— என்றதாயிற்று.]

## திருப்பாவை. 8. கீழ்வானம் (ஆறாயிரப்படி)

(கோதுகலமுடைய பாவாய்) "முலையெழுந்தார்படி மோவாயெழுந்தார்க்குத் தெரியாதிறே என்று பட்டர்.

(இவ்வைதிஹ்யம் நாச்சியார் திருமொழியில் (13—1.) "பெண்ணின் வருத்தமறியாதபெருமான்" என்றவிடத்து வியாக்கியானத்திலு முள்ளது. "முலையெழுந்தார்படி மோவாயெழுந்தார்க்குத் தெரியாதிறே யென்று பட்டருளிச் செய்தாராக ப்ரஸித்தமிறே" என்றுள்ளது அங்கு. மோவாயெழுந்தார்—மீசை முளைத்தவர்கள் என்றபடி.)

## திருப்பாவை 9. தூமணிமாடத்து (ஆறாயிரப்படி)

(தூமணிமாடம்.) ஆழ்வான் "ஹிதாம்சத்துக்கு ஒரு வைலக்ஷண்யமுடைய க்ருஹயாத்ரையை யநுஸந்திக்கவமையும்" என்றாப்போலே (இவர்களுடைய இவர்களுடைய மாளிகையிலழகை அநுபவிக்கிறார்கள்.)

அவ்விடத்திலே (மாமீர்.) (தூயிலணைமேல் கண்வளரும்.) பட்டர்க்கேச் சிலர் 'தொண்டனூர் நம்பி திருவடிச் சார்ந்தார்' என்று விண்ணப்பஞ் செய்ய, "அவர் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமைசெய்து போந்தபடிக்கு, திருநாட்டுக்கு நடந்தாரென்று சொல்லவேண்டாவோ ? என்றருளிச் செய்தார். நம்பியேறு திருவுடையார் தாஸரிடையாட்டமாகவும் நஞ்சீயர் இப்படியருளிச் செய்தார்.

## திருப்பாவை 12 கனைத்திளங்கற்றெருமை. (மூவாயிரத்திலும் ஆறாயிரத்திலும்.)

(இனித்தானெழுந்திராய்) எம்பெருமானார் திருவவதரித்தாப் போலே காணும் இப் பெண்பிள்ளையும்.

(விவரணம்) இங்கு "அனைத்தில்லத்தாருமறிந்து" என்றதில் நோக்காக "பகவத் விஷயம் ரஹஸ்யமாக அநுபவிக்குமித்தனை, புறம்பு இதுக்கு ஆளுண்டோவென்று இடக்கிறயாகில் பெண்களையும் க்ருஷ்ணனையும் சேரவொட்டாத ஊரடைய ப்ரஸித்த

மாயிற்று என்றுமாம்" என்றருளிச்செய்து, உடனே "எம்பெருமானார் திருவவதரித்தாப்போலே காணுமிப்பெண் பிள்ளையும்" என்கிற ஸ்ரீஸூக்தியிருக்கையாலே ரஹஸ்யமெல்லாம் ஸதஸ்யமானபடிக்கு எம்பெருமானார் நினைவுக்கு வந்து இங்ஙனே யருளிச்செய்யப்பட்டது. மூவாயிரப்படியின் அரும்பதவுரையில் "இப்பெண்பிள்ளையென்றது எழுப்புகிற பெண்பிள்ளையென்றாய் ஆண்டானென்றபடி ... இவள் வாசலிலேயிருந்து அவள் ரஹஸ்யமசகவநுபவிக்க அத்தை வெளியிட்டாளென்றபடி ..." என்கிற விவரணம் காணப்படுகிறது. இதில் பொருத்தமிருப்பதாகத் தெரியவில்லை யென்று சிலபெரியார் கூறுகின்றார்கள். இப்பெண்பிள்ளையென்றது ... எழுப்பப்படுகிற பெண்பிள்ளை" என்னும் பொருள்தான் ஸ்வரஸம் ... இப்பெண்பிள்ளைக்கும் எம்பெருமானார்க்கும் எந்த அம்சத்தில் ஸாம்யத்தை ஆச்சான் திருவுள்ளம்பற்றினாரென்று ஆராயவேண்டும். அங்யாபதேசார்த்தத்தை ... ஸ்வாபதேசார்த்தம் கொள்ளுமளவில் இப்பாட்டில் "கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி நினைத்து முலைவழியே நின்றுபால்சோர நனைத்தில்லஞ்சேறாக்கும் நற்செல்வன் தங்காய்" என்ற முதல் மூன்றடிகளினால் எம்பெருமானாருடைய இயல்பே வெட்டவெளிச்சமாகப் பேசப்பட்டிருக்கிறதென்னுமிடம் அறியப்பெறலாகும். ஸ்வாமியெம்பெருமானார் அநுவ்ருத்திப்ரஸந்நாசார்யர்களான மற்ற ஆசார்யர்களைப் போலல்லாமல் க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யராய் கன்றுகள்போன்ற சிஷ்யர்களுக்குத் திருவுள்ளமிரங்கி, உபஸத்திபண்ணிக் கேட்பார் இல்லாமலிருந்தாலுங்கூட தமது கடமையை நினைத்துப் பால்போன்ற சீரிய பொருளை வர்ஷித்தருளினவர் என்று ப்ரஸித்தியுள்ளது. அதை நினைப்பூட்டும்படியான ஸூக்திவிந்யாஸம் முதல் மூன்றடிகளில் அமைந்திருப்பது காண்க. முலைவழியே நின்று பால்சோர நனைத்து இல்லம் சேறாக்குமது எருமையேயொழிய, எழுப்பப்படுகிற பெண்பிள்ளையல்லவே; ஆகவே எம்பெருமானார்க்கும் இப்பெண்பிள்ளைக்கும் எப்படி ஸாம்யம் நிர்வஹிக்கமுடியும்? என்ற சங்கை வேண்டா. அந்த இல்லத்தில் நடைபெறும் விஷயத்தைச் சொல்லியிருப்பதானது இல்லத்தவளான பெண்பிள்ளையின் பெருமையைச் சொன்னவாறேயாகும்.

திருப்பாவை 14 உங்கள் புழைக்கடை. (ஆறாயிரப்படி.)

(செங்கல் பொடிக்கூறை) தாமஸப்ரக்ருதிகளைச் சொல்லுகிறது என்று எம்பார். தம: ப்ரசுரர் உணர்ந்தார்களென்று சொல்லியோ எழுப்புவதென்று ஸத்த்வநிஷ்டரான ஸந்யாஸிகளைச் சொல்லுகிறதென்று திருமலைநம்பி.

திருப்பாவை 15 எல்லேயிளங்கிளி. (மூவா. ஆறா.)

(சில்லென்றழையேன்மின்) திருவாய்மொழி பாடாநின்றால் செல்வரெழுந்தருளுகையும் அஸஹ்யமாமாப்போலே.

("திருவாய்மொழிபாடுகை திருப்புன்னைக்குக்கீழே" என்பது அரும்பதவுரை.)

அங்கேயே (உனக்கென்ன வேறுடையை) நீ யொருவர்க்கும் விரோதியல்லை. நீ புக்குத் திருவடித் தொழு என்ன, ஆழ்வான் வார்த்தையை நினைப்பது.

(விவரணம்.) கூரத்தாழ்வான் சோழராஜஸபைக்கெழுந்தருளி அவ்வரசனுடைய கொடுங்கோன்மையினால் திருக்கண்களையிழந்து மீண்டும் கோயிலேற வெழுந்தருளிப் பெரிய பெருமாளைத் திருவடிதொழுவதாக ஸந்நிதியினுள்புக்குப் பெரிய பலி பீடத்தருகே தெண்டன் ஸமர்ப்பித்துத் தம்முடைய அளவற்ற ஆர்த்தியை ஆவிஷ்கரித்து 'பெரிய நம்பியை அங்கீகரித்தாப்போலே அடியேனையும் அங்கீகரித்தருளலாகாதோ?' என்று திருவுள்ளம் நொந்து விண்ணப்பஞ் செய்து பின்பு ...

ஸேவிப்பதாக எழுந்தருள, "ராமாநுஜருடைய ஸம்பந்தமுடையாரொருவரும் உள்ளே புகவொண்ணாது" என்று சோழன் கட்டளையிட்டுவைத்தபடி அவனது ஸேவகர்கள் ஸன்னிதிவாசலிலே நின்று ஆழ்வானை உள்ளே புகவொட்டாமல் தகைய, அங்குள்ளாரில் சிலர் "இந்த ஐயங்கார் மற்றவர்களைப் போலல்லர், இவர் ஆத்மகுணங்கள் நிரம்பியவர். இவரைத் தடை செய்யாது புகவிடலாம்" என்று சொல்ல, இவற்றைக் கேட்ட ஆழ்வான் நடுக்கிட்டு நடுங்கி காலடி பின்வாங்கி 'ஐயோ! இவ்வாத்மகுணங்கள் ஆத்மகுணம் ஆசார்ய ஸம்பந்தத்துக்கு ஹேதுவாயிருந்தது; அடியேனுக்குண்டான ஆத்மகுணம் ஆசார்ய ஸம்பந்தத்தை அறுத்துக்கொள்ளுகைக்கு ஹேதுவாயவிட்டதே' என்று வெறுத்துக்கொண்டு புறப்பட்டு 'என் பேற்றுக்கு எம்பெருமானார் திருவடிகளுமே அமையும்; அந்த ஸம்பந்தத்தை அஸத்கல்பமாக்கின பெருமாளை ஸேவிக்க வேண்டுவதில்லை' என்று உறுதிகொண்டு அன்றே திருமாளிகைக்குப் புறப்பட்டருளினார் என்பது இதிஹாஸம். இங்கு, ராமாநுஜ ஸம்பந்திகளை ஸன்னிதிக்குள்ளே புகவிடக்கூடாதென்கிற அரசனது கட்டளையின்படி ஆழ்வானையும் விலக்கவேண்டியிருக்க, ராமாநுஜ ஸம்பந்தத்தை உபயோகமற்றதாக்கி இவருடைய ஆத்மகுண பூர்த்தியையே அவர்கள் மதித்தபடியால் அது ஆழ்வானுக்கு அஸஹ்யமாயிற்று. அது தோன்ற ஆழ்வானருளிச்செய்த வார்த்தை "உனக்கென்ன வேறுடைமை" என்றவிடத்திற்கு மிகவும் பொருத்தமானது.

## திருப்பாவை 16 நாயகனாய் நின்ற. (ஆறாயிரப்படி)

(அவதாரிகையில்—) நஞ்சீயர், பிள்ளைக்கு; "ரஸவாதம் கைப்பட்டவன் இருந்தவிடமெல்லாம் பொன்னுமாப்போலே ப்ரமேயம் கைப்பட்டவனுக்குச் சொல்லிற்றெல்லாம் வார்த்தையாம்" என்றார்.

(நாயகனாய் நின்ற)... ஆளவந்தார் எம்பெருமானை ஸ்தோத்திரம் பண்ணவென்று புக்கு ஆசார்ய ஸ்தோத்திரத்திலே யிழிந்தார்; அதுக்கடி, ஒருவன் ஒரு ரத்னத்தைக் கொடுத்தால் அதின் விலையை அறியவறியக் கொடுத்தவன் பக்கலிலே விருப்பம் பிறக்குமாபோலே, சாஸ்த்ரங்களெங்கும் அப்யஸித்துப் பார்க்குமிடத்து உபாயமாகத் தோற்றுகிற கர்மஜ்ஞாந பக்திகள் பேற்றுக்கு ஸாதநமாகமாட்டாது, பகவத் ஸம்பந்திகளை முன்னிட்டுக் கொண்டு அவனையே உபாயமாகப் பற்றுமது பேற்றுக்குடலென்று ஸ்வப்ரபந்தத்திலே முதலிலும் முடிவிலும் பரமாசார்யரான பெரிய முதலியாரைப் பற்றினார். *த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே* என்று தாம் அவன் திருவடிகளிலே பண்ணின ப்ரபத்தியையும் கீழிலவற்றோடே காற்கடைக்கொண்டு *நாதமுநிம் விலோக்ய* என்று பெரிய முதலியாரை முன்னிட்டார்.

.........பட்டர் நஞ்சீயரை "பெரிய பெருமாள் தஞ்சமென்றிக்குமவரைத் தஞ்சமென்றிரும்" என்றருளிச் செய்தார். ... ... (*)

## திருப்பாவை 18 உந்து மதகளிற்றன். (மூவா. ஆறா.)

(வியாக்கியான முடிவில்) எம்பெருமானார் விசேஷித்து உகந்திருக்கும்பாட்டு இப்பாட்டு.

(விவரணம்) எம்பெருமானார்க்குத் திருப்பாவை ஜீயரென்று ஒரு திருநாமமுண்டு. திருமடைப்பள்ளிக் கைங்கரியத்துக்குக் கிடாம்பியாச்சான் அமருவதற்கு முன்னே ஸ்வாமி மாதுகரத்திற்கெழுந்தருளுகிறபோது திருப்பாவை அநுஸந்தானத்தோடு எழுந்தருள்வது வழக்கம். ஒருநாள் பெரியநம்பி திருமாளிகைக்கு மாதுகரத்திற்கெழுந்தருள, அப்போது திருக்காப்பு சேர்த்திருக்கையாலே ஸ்வாமியின் மந்தஸ்வரமான அநுஸந்தானத்தைக் கேட்டு அத்துழாய் உள்ளிருந்து வந்து திருக்காப்பு நீக்கி நிற்க, ஸ்வாமி அவளைக் கண்டவளவிலே தண்டனிட்டு நிற்க, அவள் திருத்தகப்பனாரான பெரிய

நம்பி பக்கலிற்சென்று ‘ ஐயா ! கதவைத் திறந்து சென்றேன், என்னைக் கண்டவுடனே ஜீயர் தெண்டனிட்டார் ’ என்று சொல்ல; நம்பி ஸர்வஜ்ஞராகையாலே “ உந்துமத களிற்றன் அநுஸந்தானமாயிருக்கும் ” என்றருளிச்செய்ய அதுகேட்ட அத்துழாய் ‘ ஆவதென்?’’ என்ன, *செந்தாமரைக் கையால் சீரார் வளையொலிப்ப வந்து திறவாய்* என்று அநுஸந்தியாநிற்க நீ திறந்தவாறே அப்படியே உன்னைக்கண்டு நப்பின்னையை ஸேவிக்கப் பெற்றோம் ’ என்று கொண்டாராகவேணும்—என்று நம்பி அருளிச்செய்தார் ; ஆகையால் இப்பாட்டு எம்பெருமானுருக்கதென்று நம் முதலிகள் ஆதரிப்பரென்க. (*)

....

## திருப்பாவை 20 முப்பத்துமூவர். (ஆறாயிரப்படி)

(திருவே) உதாரவாக்குக்களாகிறார்—திருமங்கையாழ்வாரும் ஆளவந்தாரும் ஆழ்வானும் பட்டரும். ... ... .... *

## திருப்பாவை 21 ஏற்றகலங்கள். (ஆறாயிரப்படி.)

(வள்ளல் பெரும்பசுக்கள்)*உதார :—ஸந்தர்சயந்* என்று ஆளவந்தார்.

## திருப்பாவை 22. அங்கண்மாஞாலத்து. (ஆறாயிரப்படி.)

(அங்கண்மா ஞாலத்தரசர்)..........வேதாந்தங்களிலே ப்ரஹ்லாதிகளுங்கூட ஏழு ஜன்மம் ஜனித்து அரிய ஸாதநாநுஷ்டானங்களைப்பண்ணி பின்பு பகவத்ப்ராப்திரூப புருஷார்த்தம் பெற்றாகளாகச் சொல்லாநின்றது. இவ்வருகே எத்தனையேனும் கீழாயிருப்பார் சிலர் சரீராவஸாநகாலத்திலே மோக்ஷம் கிடைக்குமென்று யோதிசோறு கட்டிக்கொண்டிரா நின்றார்கள் ; இவையிரண்டும் சேரவிழுந்தபடியெங்ஙனே? என்று பட்டரைக் கேட்க ; ஒரு குறையில்லையென்றருளிச்செய்தார் ;—“ அன்வ தன் விபூதியளவுஞ் செல்லப் பச்சையிட்டுப் பெறக்கடவேனென்று கோலக்கடவன். யதோபாஸநம் பலமாகையாலே தத்க்ரதுந்யாயத்தாலே அப்படியேயாயிருக்கும் அவனுக்கு ; இவன் தன் பக்கல் ஒன்றுமில்லாமையை அநுஸந்தித்து ப்ரதமபரிஸ்பந்தமே பிடித்து நீயேயெனக்கு உபாயமாகவேணுமென்று காலிலே விழும் ; அவனும் அப்படியே தன் தலையிலே யேறிட்டுக்கொண்டு இவன்கை பார்த்திருக்க வேண்டாதபடி தலைக்கட்டிக்கொடுக்கும். அவனுக்குத் தான் சொல்லின பரப்படங்கலும் விடவேணும் ; இவனுக்கு இவ்வளவேயிறே விடவேண்டுவது. அவன் அநுஷ்டிக்கக்கடவவையெல்லாம் அநுஷ்டித்துப்பின்பு பலந்தரப் பார்த்திருக்கும் ; ஈச்வரனையேயிறே இவன் முதலிலே பற்றிற்று.”

அங்கே பமேலே, (எங்கள்மேல்)........ஸிம்ஹம் ஆனையோடே பொராநின்றால் குட்டிகள் முலைகொடுக்குமாபோலேயென்று பட்டர். *குழவியிடைக்காலிட்டெதிர்ந்து பொரும்*

## திருப்பாவை 23 மாரிமலை முழஞ்சில் (மூவாயிரம் ஆறாயிரம்)

(யாம் வந்த காரிய மாராய்ந்தருள்)........அழகர் கிடாம்பியாச்சானை அருள் பாடிட்டு ஒன்று சொல்லிக்காணாய் என்ன, *அபராத ஸஹஸ்ரபாஜநம்* என்று தொடங்கி அகதிம் என்ன, நம்பிராமாநுசனையுடையையாயிருந்து வைத்து அகதிம் என்னப்பெறாய் ’ என்றருளிச் செய்தார்.

ஆறாயிரப்படியில் இவ்வைதிஹ்யம் அவதாரிகையின் முடிவிலே உள்ளது.

## திருப்பாவை 24 அன்றிவ்வுலகம் (மூவாயிரப்படி)

(நின்கையில் வேல்போற்றி) (*வடிவார் சோதிவலத்துறையும் சுடராழியும் பல்லாண்டென்று ஆயுதங்களுக்கும் மங்களாசாஸனம் பண்ணினாரிறே தமப்பனார்.) "கதே ஜலே ஸேதுபந்தம் தமப்பனுருக்கும் மகளுக்கும்பணி" என்று ஜீயர் அருளிச் செய்வர்.

## திருப்பாவை 25 ஒருத்திமகனாய். (ஆறாயிரப்படி)

(ஒருத்திமகனாய்)..........அவளுக்கு முலை சுரவாநின்றதாகில் இவன் அழுது முலையுண்ணா நின்றானாகில் உமக்குச் சேதமென்? என்று பட்டர்.

## திருப்பாவை 27 கூடாரைவெல்லும் (மூவாயிரப்படி.)

(யாம் பெறு சம்மானம்) * பதிஸம்மாநிதா ஸீதா என்று—பெருமாள் தோளில் மாலையை வாங்கியிட்டார் என்று ஆழ்வான் பணிக்கும். பட்டரும் பணிக்கும்.

(விவரணம்.) பட்டரும் பணிக்குமென்று காண்பதில் அச்சுப்பிழை யிருக்கும் போல் தோன்றுகிறதென்று சில பெரியார் கூறுகின்றனர். *பதிஸம்மாநிதா ஸீதா* என்ற விடத்திற்கு ஆழ்வான நிர்வாஹம் மேலே காட்டப்பட்டது. பட்டருடைய நிர்வாஹம் அதனில் வேறாக மற்றோரிடத்தில் காண்கிறது—காலைப்பிடிக்குமென்று.

அங்கேயே (முழங்கைவழிவார) நம்பிதிருவழுதி வளநாடுதாஸர் நெய்படாதோ வென்ன, க்ருஷ்ண ஸந்நிதியாலே த்ருப்தைகளாயிருக்கிறவர்களுக்குச் சோறு வாயில் தொங்கிலன்றோ நெய் வாயில் தொங்குவது என்று பட்டரருளிச் செய்தார்.

[ஆறாயிரப்படி] (யாம் பெறு சம்மானம்)......வெளித்திருமுற்றத்திலே, ப்ரஸாதம் வர அவ்வளவிலே "யாம் பெறு சம்மானம் வந்தது" என்றார் பட்டர்.

## திருப்பாவை 30 வங்கக்கடல் (மூவா. ஆறா.)

(அவதாரிகையில்) கன்றிழந்த தலைநாகு தோற்கன்றுக்கும் இரங்குமாபோலே, இப்பாசுரம் கொண்டும் நமக்கும் பலிக்குமென்று பட்டர் அருளிச் செய்வர்.

(மூவா=மாதவனைக் கேசவனை) * அலைகடல் கடைந்ததனுள் கண்ணுதல் நஞ்சுண்ணக் கண்டவனை, விண்ணவரமுதுண அமுதில்வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமானே * என்கிறபடியே தான் ஸாக்ஷாதம்ருதத்தையுண்டு ப்ரஹ்மாதிகளுக்குக் கோதைக்கொடுத்தான் என்று பட்டரருளிச் செய்வர்.

(மூவா—எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர்) விடிவோறே யெழுந்திருந்து முப்பது பாட்டையும் அநுஸந்தித்தல், மாட்டிற்றிலனாகில் * சிற்றஞ்சிறுகாலே யென்கிற பாட்டை யநுஸந்தித்தல், அதுவும் மாட்டிற்றிலனாகில நாமிருந்த விருப்பை நினைப்பது—என்று பட்டர் அருளிச் செய்வர். ... ... ... *

## ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலையில்

## திருப்பாவை வியாக்கியான ஸங்க்ரஹம் முற்றிற்று.

# நாச்சியார் திருமொழி.

## மூன்றாந் திருமொழி—கோழியழைப்பதன்—9. கஞ்சன்வலைவைத்த.

(காரிருளேல்லில் பிழைத்து)...பிள்ளையுறங்காவில்லிதாஸர்—இவன் தான் பருவம் நிரம்பாமையாலே தன்னை நோக்கிக்கொள்ள மாட்டிற்றிலன்; புறம்பு தானே பரிந்து நோக்குமைக்கு ஒருத்தரில்லை. கம்ஸாதிகள் தப்பாமல் அகப்படுத்தக் கோலி நின்றார்கள். அவ்வளவில் உதவித்தந்தது இருள், அதனைச் சரணம்புகும்த்தனையிறே—என்று பணிப்பராம்.

## நான்காந் திருமொழி—மூதறுபாட்டு. தெள்ளியார் பலர்.

(மணவாளர் பள்ளி கொள்ளுமிடத்து) பள்ளிகொள்ளுமிடமாகிறது கோயில் என்று பட்டரருளிச் செய்ய கான் கேட்டேன் என்று பிள்ளையழகியமணவாளரரையர் பணிப்பர்.

## தெள்ளியார் பலர் 9. கொண்டகோலக்குறள்.

(அண்டமும் நிலனுமடியொன்றினால்) (த்ரீணி பதா விசக்ரமே) என்றும், * மூன்றடி நிமிர்த்து என்றும் உண்டாயிராநின்றது. இதிருக்கிறபடியென்?" என்று பட்டரைக் கேட்க; "परो मात्रया तनुवा वृधान । न ते महित्वमन्वश्नुवन्ति । उभेते विद्म रजसी पृथिव्या विष्णोदेवत्वम् । परमस्यवित्से" என்று, வேத புருஷன்தானே இரண்டடியாலளந்தவிடம் எல்லாருமறியும், நீ மூன்றடியாலளந்தவிடம் உனக்கே தெரியுமத்தனையென்று வேதபுருஷனும் காணாமல் விட்டான்; அவன அளந்தமையுண்டு; அவனுக்கே தெரியுமத்தனை என்றருளிச் செய்தாரென்று ஜீயரருளிச் செய்வர்.

## தெள்ளியார் 11: ஊடல் கூடல்.

(நீடுநின்ற நிறைபுகழாய்ச்சியர்)...நிறை புகழாச்சியர் என்கிறதுக்கு எம்பார், இவர்களுக்கு நிறைபுகழாவது க்ருஷ்ணனை இன்னாள் நாலுபட்டினி கொண்டாள், இன்னாள் பத்துப்பட்டினி கொண்டாள் என்னும் புகழ்காணும் என்றருளிச் செய்வர்.

(விவரணம்.) * கூர்மழைபோல் பனிக்கூதலெய்திக் கூசிநடுங்கி யமுனையாற்றில் வார்மணற்குன்றில் புலரநின்றேன் வாசுதேவாவுன் வரவு பார்த்தே * என்கிறபடியே கண்ணபிரானுடைய வரவை எதிர்பார்த்திருப்பர்கள் பல மாதர். இவன் இப்படி பல மாதர்கள் தன்னை யெதிர்பார்த்திருக்கும்படி செய்துவிட்டுத் தன் மனத்துக்கினியாளான வொருத்தியோடே கலந்திருந்து போதுபோக்குவன்: அப்போது எதிர்பார்த்திருந்த மற்றை மாதர்கள்* இன்னம்மென்கையகத் தீங்கொருநாள் வருதியேல் என் சினம் தீர்வன் நானே என்றபடி இனி அந்தக் கண்ணபிரான் இங்கே வருவானாகில் முகங்கொடுத்து ஒரு வார்த்தையுஞ் சொல்லக் கடவோமல்லோமென்று ஸங்கல்பஞ் செய்துகொண்டு அளவற்ற ரோஷத்துடனிருப்பர்கள். பிறகு தனக்கு ஒழிந்தபோது ஒரு நாள் கண்ணபிரான அளவிறந்த அன்பு பூண்டவன்போல ஆடிப்பாடிக்கொண்டு அவர்கள் முன்னே வந்து நிற்பன். அப்போது அவர்கள் தாங்கள் முன்பு செய்துகொண்ட ஸங்கல்பத்தின் படியே முகங்கொடாமலேயிருப்பர்கள். அப்போது இவன் கண்ணீர் விட்டழுவதும் காலில் கும்பிடுவதுமாய் ஊணுமுறக்கமுமில்லாமல் பலநாட்களளவும் அவர்களது வீட்டைவிட்டுப் பெயராதே இடைகழித்திண்ணையிலே கிடந்து படுவன். இப்படி நாலு நாள் பட்டினிகிடந்த பிறகு ஒருத்திமனமிரங்கி முகங்கொடுப்பள். மற்றொருத்தி அவ்வளவிலும் மறம் மாறாதே இவன் எட்டு நாள் பட்டினி கிடந்த பின்பு முகங்கொடுப்பள்... இப்படி பலபல நாள் பட்டினிகிடந்தாகிலும் அவ்வாய்ச்சிகள் பக்கலிலே இவன் முகம்பெற நினைப்பது அவர்களிடத்துள்ள ஏதேனுகுணம் ஆத்மகுணம் முதலியவற்றாலான வைலக்ஷண்யத்தைப்பற்றியாம். இதனால் அவர்களது புகழ் வீறுபெறுமாயிற்று.

னும் தரித்திருக்கைக்கு அடியென்? என்று நான் ஜீயரைக் கேட்க: ஜ்ஞாநமன்று இவள் ஜீவநத்துக்கு ஹேது; பெருமாள் ஸத்தையாய்த்து; அவர் உளராகையாலே இருந்தாள் காணும் என்றருளிச்செய்தார்.

(விவரணம்.) இது, பெரியவாச்சான்பிள்ளைக்கும் நஞ்சீயருக்கும் நடந்த ஸம்வாதமென்று தோன்றுகிறது. நம்பிள்ளைக்கும் நஞ்சீயர்க்கும் நடந்த ஸம்வாதமென்று கொண்டாலும் குறையில்லை. இங்குக் கேள்வி யென்ன? விடையென்ன? என்னில்; மாயாவியான ராவணன் இராமன தலையறுப்புண்டு இறந்தானென்று தோற்றும்படி ஒரு மாயாசிரஸ்ஸைக் கொண்டுவந்து பிராட்டிக்குக் காட்டி 'இதோ பார் ஸீதே! உன் கணவன் தலையறுப்புண்டொழிந்தான்' என்று பொய்சொன்னபோது, இக்காலத்துப் பெண்டிர் தமது பர்த்தாக்களின் மரணத்திலே சற்றுக் கண்ணீரைப் பெருகவிட்டுக்கிடப்பதுபோல பிராட்டியும் துக்கப்படுவதுபோல் சிறிது துக்கப்பட்டு உயிர் தரித்திருந்தாளேயொழிய, பிராணன் படுக்கென்றுபட்டுப் போகப் பெற்றிலளே; மெய்யான அன்பு இருக்குமாகில் அந்த ஸமயத்திலுங்கூடவா உயிர்தொலையாதிருக்கும்? பிராணநாதன் உயிரொழிந்தானென்று மாயாசிரஸ்ஸைக் கண்டு மெய்யாக நம்பித்தானே துயருற்றாள்; நம்பவில்லை என்றால் துயருற அவசியமில்லை; துயருறுகையாலே நம்பினாளென்று நிச்சயிக்கவேண்டிற்று. அப்போது உயிர்தரித்திருந்து அழுதாளென்று ஸ்ரீராமாயணத்தில் சொல்லிற்றே; அவள் இராமபிரானிடத்து வைத்திருந்த பிரணயத்திற்கும் இப்படி யழுவதற்கும் சேர்த்தியில்லைபோலிருக்கிறதே யென்று வினா; இதற்கு விடையாவது:— நாயகன் உயிரோடிருக்கிறானென்று நினைத்துக்கொள்வதும் உயிரிழந்துவிட்டானென்று நினைத்துக்கொள்வதும் உபயோகமற்றது. மானிடர்க்கு மருள் ஸம்பாவிதமாகையாலே உள்ளதை இல்லாததாகவும் இல்லாததை உள்ளதாகவும் மருளக்கூடும். அந்த மருளினால் விபரீதம் எதுவும் நேர்ந்திடாது. உண்மையில் நாயகன் ஜீவித்திருந்தானாகில் அந்த ஸத்தையே காரணமாக நாயகியின் ஸத்தையும் குறையற்றதாகும். நாதனது ஸத்தையில் குறையில்லாதிருக்க, உண்மைக்கு மாறாக ஒருவர் ஸத்தையில்லையாகப் பொய் சொன்னால், அதனை நம்பநேர்ந்தாலும் துக்கமுண்டாகுமத்தனையல்லது ப்ராணலோபமுண்டாகாது. உத்தமநாயக நாயகிகளின் உயிர்களானவை *ஆக்யாதி ஹ்ருதயம் ஹ்ருதா* என்றபடி பரஸ்பரம் தம் தம் ஸத்தையைத் தெரிவித்துக்கொள்ளும். ப்ரக்ருதத்தில், ராவணன் மாயாசிரஸ்ஸை வஞ்சனையாகக் காட்டினாலும், பிராட்டி நம்பினாலும், உண்மையில் பெருமாளுடைய ஸத்தைக்குக் குறையில்லாமையாலே பிராட்டியும் ஸத்தைகுலையாதிருந்தாள்—என்று. இவ்வைதிஹ்யத்திற்கு இங்கு ப்ரஸக்தி என்னென்னில்; மூலத்தில் 'என்தத்துவனை' என்றுள்ளதற்கு இது பொருத்தமான ஸம்வாதமாகும். குயிலானது ஆண்டாளை நோக்கி 'இருடீகேசனை இங்கு வருமாறு கூவச் சொல்லுகிறாய் நீ; அவன் உன்னோடு சேர்ந்திருந்த காலத்தில் 'பிரியேன், பிரியில் பிழையேன்' என்று சொன்னதை நான் கேட்டிருக்கிறேன்; உனக்கும் அது ஞாபகமிருக்குமே; ஆகவே உன்னைப்பிரிந்துபோய் இன்னும் வந்து சேராதிருக்கிற அவன் பிழைத்திருப்பனென்று உனக்குத் தோன்றவில்லையே; அன்னவனை நான் கூவிப் பயனென்ன?' என்றதாகக் கொண்டு, அதற்கு ஆண்டாள் 'குயிலே! அங்ஙனன்றுகாண்; நான் ஸத்தை கெடாமல் இருக்கின்றமையால் காதலனும் அப்படியே ஸத்தை கெடாதிருப்பனென்று நினை; அவனது ஸத்தைக்கு ஹாநி விளைந்திருக்குமாகில் எனது ஸத்தையும் குலைந்திருக்குமன்றோ; அவன் என்னுடைய தத்துவன்காண்; ஆதலால் அவனுடைய ஸத்தையை நிச்சயித்துக்கொள் என்கிறாளென்க. ஆகவே என்தத்துவன் என்றது—என்னுடைய ஸத்தைக்கு ஹேதுவானவன் என்றபடி.

அதிலேயே மேலே (தலையல்லால் கைம்மாறிலேனே) பெற்றி, கிழக்குக்குப்போன விடத்திலே இதுக்குப் பொருளென்? என்று என்னை சிலர் கேட்டார்கள்; 'நீ இவன் வரும்படி கூவவல்லையாகில் உனக்கு ப்ரத்யுபகாரமாக என் தலையைத் தருமத்தனையிறே என்று சொல்லுகிறாள் என்று சொன்னேன்; இவ்வளவாகமாட்டாது இதற்குப்

பொருள் என்றிருந்தேன்; அவ்விடத்துக்கு ஜீயரருளிச் செய்யும்படி என்! என்று கேட்டார்; நீ பண்ணின வுபகாரத்துக்கு இத்தலையால் செய்வதொன்றுண்டோ என்று என் தலையை உனக்காக்கிக் காலமெல்லாம் உன் காலிலே வணங்கி வர்த்திக்குமத்தனை என்றேன். போரக்கொண்டாடியருளி 'நான பதியென்கிறுள் என்றருளிச் செய்வர்—என்றேன். பேரக்கொண்டாடியருளி 'நான பதினொருகு திருவாய்மொழிகேட்டேன்; திருமொழி கேட்கப்பெற்றிலேன்; போன விடங்களிலே என்னைச் சிலர் கேட்டால் அருளிச்செய்யுமதுவே எனக்குத் தோற்றி காணும் சொல்லும்படி ப்ரஸாதிக்கவேணும் என்று வேண்டிக்கொண்டேன்; அவரும் அப்படி ப்ரஸாதித்தருளினர்; ஒரு வரலாபத்தாலே இவை அறியப்போகாது, ச்ரவணங்கொண்டறியவேணும் என்றருளிச் செய்தார்—என்றருளிச் செய்வர்.

## நாச்சியார் திருமொழி. 6—5. கதிரொளி தீபம்.

(மதுரையார் மன்னன்) ஒருவன் ஒரு பிள்ளையையுகந்தருளப்பண்ணி 'இவர்க்கு என்ன திருநாமம் சாத்துவோம்' என்றிருக்கச் செய்தே, அதுவே இதுவே என்றழையாதே என்னை மதுரை மன்ன னென்றழை என்று ஸ்வப்நத்திலேயருளிச் செய்தாராம்.

அப்பாட்டிலேயே, (எங்குமதிரப்புகுத.) மஹாபலியஜ்ஞவாடத்திலே கடந்த போது பூமி வெளித்ததென்று ஒரு க்ரந்தத்தில் கிடந்ததாய் 'இதுக்குப் பொருளென்?' என்று கேட்டவாறே, 'ஸர்வேச்வரனன்றோ சொல்லவேணுமோ?' என்றார்களாய், இத்தை ஜீயர் கேட்டருளி பட்டரைக் கேட்க, 'இரப்பில் பதற்றத்தால் அடியிட்டபடி காணும' என்றருளிச் செய்தாராம்.

## நாச்சியார் திருமொழி 7—2. கடலிற்பிறந்து.

(கடலில் பிறந்தித்யாதி.) நஞ்சீயர் ஸம்ந்யஸித்தருளின காலத்திலே அனந்தாழ்வான் கண்டு, முன்புத்தை ஐச்வர்யமறியுமவனாகையாலே 'ஒரு பூவைச் சூடி வெற்றிலையைத் தின்று சந்தனத்தைப் பூசிப் போராநிற்கச் செய்தே எம்பெருமானை ரக்ஷக னென்றிருந்தால் பரமபதத்தில் நின்றும் இழியத்தள்ளுவர்களோ? இங்ஙனே செய்த தாகாது' என்று போர வெறுத்தவாறே, கூட நின்றவர்களும் 'இங்ஙன் செய்வதே!' என்று வெறுத்தார்களாய் 'இவர்தாம் இனிச் செய்வதென்?' என்று விட்டு, 'திருமந்த்ரத்திலே பிற' என்று முக்கால் சொல்லி 'திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயைக [illegible]படியாய்த் தலைக்கட்டுவது உன் காரியம்' என்று ப்ரஸாதித்தான். திருமந்த்ரத்தில் சொல்லுகிறபடியே ஸ்வரூப ஜ்ஞானமுண்டாய் த்வயத்தில் சொல்லுகிறபடியே உபாய பரிக்ரஹமுண்டாகவேணுமென்று ப்ரஸாதித்தான்.

## நாச்சியார் திருமொழி 9—3. கருவிளை யொண்மலர்காள்.

(எனக்கு) நஞ்சீயர் ஸுந்தரபாண்டிய தேவரைக் கண்டிராநிற்கச் செய்தே *நூனர் தசரதோபம:* என்கிறவிடத்துக்கு, பிறந்துபடைத்த குணங்களும் [illegible] சக்ரவர்த்தி திருமகன் என்னப் குணங்களுமெல்லாம் கூடினாலும் அரைமட்டேயாய் சக்ரவர்த்தி திருமகன் என்னப் போருமித்தனை என்றருளிச் செய்ய, பரமபுருஷனுக்கு ஒருவன் வயிற்றிலே பிறந்து ஓரேற்ற முண்டாகவேணுமோ? அவன் பிறக்கையாலே அக்குடிதனக்கும் ஏற்றமாமித்தனையன்றோ? என்றானும். நாம் போன ஸமாதி இவனறிந்தில னென்றுபார்த்து அதெல்லாம் கிடக்கச் செய்தே பரமபுருஷன் என்னும்படி என்தான்! என்றாராம். ஸ்ரீவிபீஷணாழ்வானை ப்ரஸங்கித்தவாறே 'விபீஷணனோதான் அழகிதாகச் செய்தான்! எல்லாவற்றையும் ஆபத்ஸமயத்திலே ப்ராதாவை விட்டுப் போந்தானே என்றானும். எல்லாவற்றையும் விட்டுக் கொடுக்க வொண்ணுமென்று பிதாவும் ஜ்யேஷ்டனை ப்ராதாவும் சேரப் போனவன்று ப்ராதாவை அநுவர்த்திக்கக் கடவன்; பிதாவோடே விரோதித்தவன்று ஜ்யேஷ்டப்ராதா வென்று பாராதே பிதாவை யநுவர்த்திக்க வேணும் என்றருளிச் செய்தார்.

### நாச்சியார் திருமொழி 9—6. நாறு நறும் பொழில்.

(வாய் நேர்ந்து) 'நூறுதடாநிறைந்த வெண்ணெய்' என்று பெண்பிள்ளை ப்ரார்த்தித்து வைத்தாள்; கொடுத்தாளாகச் சொல்லக் கேட்டிலோம்; பாரித்தவற்றை யிறுக்கை அஸ்லைந்தாநுஜாதர்க்கு பரமிறே என்று தாம் அமுது செய்யப் பண்ணியருளி ஞராம். (எம்பெருமானார்.)

* அங்யத் பூர்ணதபாம் கும்பர்தங்யத் பாதாவநேஜநாத் * என்கிறவஸ்துவுக்கு நூறுதடா நிறைந்த வென்று இங்ஙனே போரச் சொல்லுவானென்? என்று நான் ஜீயரைக் கேட்டேன்; திருவாய்ப்பாடியிலைச்வர்யத்துக்கு இதெல்லாம் கூடினாலும் ஒரு பூர்ணகும்பஸ்தாநீய மென்றருளிச் செய்தாரென்று அருளிச் செய்வர்.

(ஏறு திருவுடையான்) வங்கிப்புரத்து நம்பி ஸ்ரீபாதத்திலேயாயிற்று சிறியாத்தான் ஆச்ரயித்தது. போசள ராஜ்யத்தில் நின்றும் வந்தநாளிலே ராஜகேஸரியிலே ஆச்சான் கடந்திருந்தானாய், காணவேணுமென்று அங்கே சென்று கண்டிருக்கிறவளவிலே, நம்பி எனக்கிங்ஙனே பணிக்கக் கேட்டேன்;—" பாஹ்யஸமயங்களிலுள்ளாரும் ஒருவஸ்துவைக்கொண்டு அது தனக்கு ஜ்ஞாநாதிக்யத்தையு முண்டாக்கிக்கொள்ளாநின்றார்கள்; அவர்களிற் காட்டில் வைதிகஸமயமான நமக்கேற்றம், 'ச்ரிய: பதியாச்ரயணீயன்' என்று பற்றுகிற விதுகாண்" என்று பணித்தாரும்.

### நாச்சியார் திருமொழி. 9-8. 'காலையெழுந்திருந்து'—

(காலையெழுந்திருந்து) ஆச்சான் பணித்ததாக ஜீயரருளிச்செய்யும்படி:—" இவள் பிறந்த ஊரில் திர்யக்குக்களுக்குத்தான் வேறு போதுபோக்குண்டோ? கண்ணுறக்கந்தானுண்டோ" என்று.

### நாச். 10-ஆம் திருமொழி: கார்க்கோடல் ப்ரவேசம்.

அவன் "ஸத்யஜேயம்" என்றாலும், "ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட" என்பார் வேணுமிறே. பட்டர், வாணவதரையனைக்காண வெழுந்தருளி ஸ்ரீதேவி மங்கலத்திலே யிருக்கச்செய்தே, அவருக்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸம்ப்ரமங்களைக் கண்டு அருளிச்செய்த வார்த்தை.

இதுக்கு அரும்பதவுரையிலுள்ள விவரணம்;—" அருளிச்செய்த வார்த்தையாவது, பெருமாளிருக்க உம்மிடத்திலே ஸ்ரீவைஷ்ணவர்கள் இத்தனை ப்ரதிபத்தி பண்ணுகைக்கு ஹேது ஏது? என்று தடஸ்தர் கேட்க, பகவல்லாபத்துக்கு பாகவதர் கடாக்ஷமாகையாலே ஆழ்வான் ஸம்பந்தத்தைப் பற்றச் செய்தார்கள்—என்றருளிச் செய்த வார்த்தை".

### நாச்சியார் திருமொழி 10—2. மேல்தோன்றிப்பூக்காள்.

(மாற்றிருலைப்பட்டவர் கூட்டத்து.) இதுக்குத் திருமலைநம்பி பணிக்கும்படி—தான் பிரிவாலே நொந்தபடியாலே * ஜராமரண மோக்ஷாய * என்று ஆச்ரயிக்கும் திரளின் நடுவே என்னைக் கொடுபோய் வைக்கவல்லையே யென்கிறாள்—என்றருளிச் செய்வர். ... கேவலர் தனித்தனியேயாய்த்து அநுபவிப்பது; திரளாயிருக்கக் கூடாது என்று எம்பாரருளிச் செய்யும்படி. மாற்றுலைப்பட்டவர் கூட்டமாகிறது அடியார்கள் குழாங்களாய், என்னை அத்திரளின் நடுவே கொடுபோய் வைக்கவல்லையே என்கிறாளென்று. ...... அங்காணன்றிக்கே ஆப்பான் பணிக்கும்படி: ஆழ்வான் பணிக்கக் கேட்டிருக்கவுமாமிறே; அவன் கொடுவரச் சொன்னவர்களைத் தவிர்ந்து மாற்றுலைப் பட்டோமென்றவர்கள் திரளிலே என்னை வைக்கவல்லையே யென்கிறாளென்று.

## நாச். 10—5. பாடுங்குயில்காள்.

(வந்தருள் செய்து கூடுவராயிடில்) சிசுபாலனும் எம்பெருமானைப் பெற்றானிறே என்றார்களாய் ஆளவந்தார் கோஷ்டியிலே; 'அவன் பெற்றதைப் பேருக்குச் சொல்ல வொண்ணாது ; ருசிமுன்னாகப் பெறும் பேறாயிற்று பேறுவது ; அவனிருக்கில் நாட்டிய மென்று கொற்றவன் வாசலுக்குள்ளே சுழற்றி யெறிந்தானத்தனை காண்" என்றாராம்.

'பெரிய தேவப்பிள்ளை' என்று பட்டர் ஸ்ரீபாதத்திலே வர்த்திப்பானொருவ னுண்டு. அவன் அகத்திலுள்ளாரெல்லாரையும் அடர்த்து வார்த்தை சொல்லிக்கொண்டு போரும் ; அவன் கிழக்கே கார்யமுண்டாய்ப் போனவளவிலே ; நஞ்ஜீயர் "அவன் போனபடியாலே அகத்திலுள்ளவர்கள் சில நாளைக்குப் பிழைத்தார்களிறே" என்றாராம். அத்தைக் கேட்டருளி, "நம்மோடேயொரு ஸம்பந்தத்தைச் சொல்லி நாட்டையுமிம் மதிக்கு மதில் நம்மைத் தேய்த்துத் நின்றாகிலும் இங்கே கிடக்கை யழகிய தன்றோ? என்றருளிச் செய்தார்.

## 10-6. 'கணமாமயில்காள்'—

அம்மணியாழ்வான், ஒருவனுக்கு ஹிதத்தைச் சொல்லி அவன்காலிலே தெண்டனாகக் கிடக்குமாம். "நாம் ஒருவனை வைஷ்ணவனென்றன்றோ ஆதரிக்கிறது, நம் நெஞ்சறிந்த வைஷ்ணவனன்றோ விவன்" என்று. அத்தை ஜீயர்கேட்டருளி, "அது அவன் செய்தானேயாகிலும் சிஷ்யனுக்கு அனர்த்தம்" என்றாராம் ; "இவன் தெண்டனிடாதவன்றாக அவன் இன்னாதாகத் தொடங்குமிறே, அவிவேகியாகையாலே."

"அதுவென்? இவன் விவேகியாயன்றோ தன்னையவனுக்கு இஷ்ட விநியோ கார்ஹமாக்குகிறது. அவனுடைய விநியோகப்ரகாரங்கொண்டு கார்யமென் நமக்கென்று தன்னையங்கே நிவேதித்தன்றோ வைப்பது" என்றானாம் பிள்ளான்.

...பிள்ளை திருநறையூரரையர், பட்டர் சிலவார்த்தை யருளிச்செய்யக்கேட்டு, "இற்றைக்கு முன்பு ஓராசார்யன் பக்கலிலும் இவைகேட்டறியோம்" என்றாராய், "பிள்ளாய்! முன்பும் இவ்வார்த்தை சொன்னாருண்டு காணும், ஒரு திர்யக்கைத் திரு நாமத்தைக் கற்பித்து பின்னை அதின் வாயிலேகேட்டு அதின் காலிலே விழுந்தாரு முண்டு காணும்" என்றருளிச்செய்தாராம்.

## 10-8. 'மழையே மழையே'

(அவதாரிகை) திருமலை நம்பி, இவ்விரண்டுபாட்டையும் ஆதரித்துப் போரு ராய். அவ்வழியாலே நம்முடையவர்களெல்லாரு மாதரித்துப்போருவர்கள் ; இப்பாட் டையும் மேலிற்பாட்டையும் அநுஸந்தித்து, கண்ணும் கண்ணீருமாய் ஒருவார்த் தையுஞ் சொலலாதே வித்தராயிருப்பராம.

## 10-10. 'நல்லவென்தோழி'—

(வில்லிபுத்தூர்—தங்கள் தேவரை) ... "தங்கள் தேவரை" என்று தன்னோடு வறுத்துப் பெரியாழ்வாரோடே சேர்த்துச் சொல்லுகிறாள். பெரியாழ்வாருக்கு வரென்றாயிற்று உகந்தது ; த்ரிபுராதேவியார் வார்த்தையை நினைப்பது.

## 11-5 'பொல்லாக் குறளுருவாய்'—

(வ்யாக்யாநாந்தரத்தில் வார்த்தை)

(நம்பெருமாள்) ... பட்டரை முதுகில் புண்ணாலே நொந்துகிடக்கச்செய்தே அருளப் பாடிட்டு பெருமாள், "வாராய்! அஞ்சினாயோ" என்று கேட்டருள ; "நாயன்தே !

எனக்குச்செய்து தந்தருளாத தரமில்லை; இங்கே யிருக்கச்செய்தேயும் பரமபதம் என் சிறுமுறிப்படி செல்லும்படி பண்ணியருளிற்று; அதிலொரு குறையுமில்லை. இங்கே குளிர்ந்த முகத்தையும் திருநாமத்தழும்பையும் முறுவலையும் இழக்கவென்றால் அடியேனஞ்சேனே" என்றார்.

ஆளவந்தார் மகனார் சொட்டை நம்பி, ஓலைவிலே திருக்கோட்டியூர் நம்பியை நெகிழ ஒரு வார்த்தை சொன்னாராய், 'நீ கடக்க விரத்தி' என்றருளிச்செய்ய, அவரும் படைவீட்டிலே ராஜஸேவை பண்ணித் திரிந்தாராய், பின்பு இவருடைய சரமஸமயத்திலே இவருடைய அத்யவஸாயமறிய வேணுமென்று, "நீ நினைத்துக்கிடக்கிறதென்?" என்று கேட்டார்களாய், "ஆளவந்தார் ஸ்ரீபாதத்தின் ஸம்பந்தம் பரமபதப்ராப்தி பண்ணித்தந்தல்லது விடாது; அங்கே போனால் ஸ்ரீவைகுண்டநாதன் முகம் நம்பெருமாள் திருமுகமண்டலம்போலே குளிர்ந்திருந்த தில்லையாகில் முறிச்சுக்கொண்டு வருவதாக நினைத்திருந்தேன்" என்றாராம். 'ந ச புநராவர்த்ததே' என்கிற மர்யாதையை இடறிப் போரவேணுமே" என்றாராம்.

## 11-6. 'கைப்பொருள்கள்'—

ஒருநாள் பரத்வமே பிடித்து ஸௌலப்யத்தளவும் செல்ல வுபபாதித்தருள, அத்தைக்கேட்டு எம்பார், கண்ணுங்கண்ணீருமாய் வித்தராயிருக்க, அவரைப் பார்த்தருளி, "அவனுடைய ஸௌலப்யத்தைச் சொன்னவாறே காட்டார், 'இத்தனை எளியவனோ' என்று கைவிட்டுப்போனார்கள்பாக்யஹானியாலே. 'அறப்பெரியவன் இப்படி எளியவனாவதே!' என்று நெருங்குகைக்குடலாயிற்று உமக்கொருவர்க்கும்" என்றருளிச் செய்தருளினாராம்.

'வாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதம்பிகாங்க்ஷதே,' 'ஏதத் வ்ரதம் மம' 'நத்யஜேயம் கதஞ்சந' என்றதுக்கு "இருவரும் சரணாகத பரித்ராணம் பண்ணுகிறார்கள்" என்று பட்டர்.

(என்னித்யாதி) * * * திருமாலையாண்டான், "ப்ரக்ருதி ப்ராக்ருதங்களை த்யாஜ்யமென்று கேட்டுப் போராநிற்கச்செய்தேயும், இத்தை விடவேண்டியிருக்கிறதில்லை; ஆளவந்தார் ஸ்ரீபாதத்தை யாஸ்ரயிக்கைக் குறுப்பாமென்று ஆதரியாநின்றேன்" என்றாராம்.

## 12-2. 'நாணியினியோர்'—

(அறிந்தொழிந்தார்) இவள்தான் திருக்கோட்டியூர் நம்பியைப்போலே "பகவத் விஷயம் ஒருவரா லறியவொண்ணாது" என்று மறைத்துக்கொடுபோருமவளொருத்தி போலே காணும்.

நம்பிதாம் ஒருதிண்ணையிலே ஒருவருமறியாதபடி பகவத் குணாநுஸந்தானம் பண்ணியிருப்பார்; எம்பெருமானார் எழுந்தருளி "நம்பிமடமேது" என்றுகொண்டு தெண்டனிட்டவாறே, அங்குள்ளார், "எம்பெருமானார் நம் திருக்குருகைப் பிரானகத்தை நோக்கித் தெண்டனிடாநின்றார்" என்றபின்பிறே நம்பியுடைய ப்ரபாவம் அங்குள்ளாரறிந்தது. ஆழ்வானும் ஆண்டானும் ஓராறு மாஸம் ஸேவித்திருந்த ஸந்நிவேசத்தைக் கண்டு போரும்போது ஒருவார்த்தை கேட்டுப்போருவர்களே; ஆழ்வான் ஒருவிசை ஆறுமாஸம் ஸேவித்து நின்று போரப்புகாநிற்கச் செய்தே, ஆழ்வானை, "நம்மாழ்வார் 'அடியேனுள்ளான்' என்றபடி கண்டாயே" என்று பணித்தாராம்; "அடியேன் க்ருதார்த்தனானேன்" என்று போந்தானாம். "என்னுள்ளான்" என்று அநுமர்த்தத்தை நிஸ்சயிக்கிறவிடத்திலே "அடியேன்" என்று சேஷத்வத்தை விருப்பமாகச் சொல்லுகிறதிறே.

## 12-3. 'தந்தையும் தாயும்'—

(மாயவன் வந்துருக்காட்டுகின்றான்)...'' த்ருஷ்ட்வா ஸ்தித்வா பஹிர்குரும் '' என்கிற விடத்துக்கு பட்டரருளிச்செய்யும்படி,—'' திருவாய்ப்பாடியில் க்ருஷ்ணஸம்ஶ்லேஷத்தில் இவளைப்போலே புதியாரில்லை '' என்று.

(அப்பாட்டிலேயே ஈற்றடிக்கு.)

'' நந்தகோபாலன் கடைத்தலை '' என்றால் ப்ரஸித்தமிறே – பட்டர் அருளிச்செய்வரென்று ; இவனாலே புண்பட்ட பெண்களுடையக் கட்டணங்களும் கையும் பசும் துவளுமாயிற்று அவர் வாசல். விஷம் தீர்ப்பார் வாசல்போலே.

## 12-5. 'ஆர்க்குமென்னோய்'—

(போர்க்களமித்யாதி) '' இதுக்கு பட்டரருளிச்செய்ய நான்கேட்டேன் '' என்று அருளிச்செய்வர் ;—'' காளியன் தலையிலே க்ருஷ்ணன் பாய்ந்தான் '' என்றுகேட்டார் கேட்டவிடங்களிலே ஆழவிழுந்ததாயிற்று : பொய்கையளவும் கால்நடை நந்துபோய்ப் புகவல்லாரில்லையாயிற்றிறே. அனந்தாழ்வான் 'எம்பெருமானாரைக் காணவேணும்' என்று ஆராதிக்கச்செய்தே, வடகரையளவிலே வந்தவாறே '' திருநாட்டுக்கு எழுந்தருளினார் '' என்று சில ஏகாங்கிகள் தலைகளையும் சிரைத்து ஏறினார்கள் ; அவர்களைக் கண்டு ஸ்ரீநம்பி குஹதாஸர், மரத்திலேயேறி விழுவதாக வேறினாராய், '' தெளிந்து ஏறின நீ சாவமாட்டாய்காண், போந்திழி '' என்றாரும்.

## 12-9. 'கூட்டிலிருந்து'

(கோவிந்தா கோவிந்தா)...'' இது சோற்றுச் செருக்காலேயிறே இப்படி சொல்லுகிறது, அத்தைக் குறைக்கவே தவிருகிறது '' என்று பட்டினியே விட்டுவைத்தாள் ; '' ஊணடங்க வீணடங்கும் '' என்றிறே இவள் நினைவு. விண்ணப்பம் செய்வார்கள். மிடற்றுக்கு எண்ணெயிட்டுப் பட்டினி விட்டு மிடற்றில் கமாற்றிப் பாடுமாப்போலே, உயரப்பாடுகைக்கு உடலாய்விட்டது. என்றருளிச்செய்வர்.

## 13-1. கண்ணனென்னுங் கருந்தெய்வம்.

(இடப்பேனே) '' 'கிடந்தஇடையிலே பாடோடிக் கிடந்தாளாகாதே' என்று அங்கிளங்காட்டாழ்வான் வார்த்தை '' என்றருளிச்செய்வர்.

(பெண்ணின் வருத்த மித்யாதி) மூலையெழுந்தார் படி மோவாயெழுந்தார்க்குத் தெரியாதிறே '' என்று பட்டரருளிச்செய்தாராக ப்ரஸித்தமிறே.

(அரையில் பீதகவண்ண வாடைகொண்டு) '' மேலிட்ட உத்தரீயமாகாதோ '' என்று நஞ்சீயர் கேட்க ; '' ஸ்வேதகந்தஜுப்தைபோலேகாண் '' என்றருளிச் செய்தாராம்.

## 13-6. 'நடையொன்றில்லா'—

(நந்தகோபாலன் கடைத்தலைக்கே நள்ளிருட்கண் என்னை யுய்த்திடுமின்) என்று ஆற்றாமை கரைபுரண்டால் பொகடச்சொல்லுவதும் அவர் வாசலிலே. ஸ்ரீநந்தகோபர் தாம், சிறியாத்தானைப்போலே பரம தார்மிகராயிறே யிருப்பது.

(கொடிய கடிய திருமாலால்) ... 'அருளாத திருமாலார்க்கு' என்றதுக்கு புருஷகாரமாக அநுஸந்திக்கிறார் '' என்று முன்புள்ள முதலிகள் அருளிச்செய்யும்படி. 'பிள்ளானே இதுக்குக் கருத்தென் ? என்று நான்கேட்டேன் ; ' இப்படி நம்மை நலி

[illegible] பண்ணிற்று அவனோடேயன்றோ' என்று பணித்தார்; இத்தை பட்டர்க்கு விண்ணப்பஞ்செய்தேன்; 'பேற்றுக்கடி அவனென்றிருந்தால் இழவுக்கும் அடி அவனென்று வெறுத்து வார்த்தை சொல்லத் தட்டுண்டோ' வென்றார்" என்று நஞ்சீயரருளிச்செய்யும்படி.

## 14-1. 'பட்டிமேய்ந்தோர்'—

(பட்டிமேய்ந்து) பரமபதத்தில் கட்டுண்டிருப்பாரோபாதியாய், ஸ்வைரஸஞ்சாரம் பண்ணுவது அவதரித்துப் போந்தவிடத்தே யாயிற்று. 'வானிளவரசு' என்கிறபடியே—"திருவனந்தாழ்வான் மடியிலும், ஸ்ரீஸேநாதிபதியாழ்வான் பிரம்பின்கீழிலும் பெரியதிருவடி சிறகின்கீழிலுமாயிற்று இத்தத்வம் வளருவது" என்றாயிற்று பட்டரருளிச்செய்வது.

(இட்டீறிட்டு) "'அவாக்யநாதர:' என்கிற தத்வம் 'இட்டீறிட்டு' என்னும்படியிருப்பதே! என்று சிறியாத்தான் போரவித்தராயிருக்கும்" என்று அருளிச்செய்வர்.

## 14-3. 'மாலாய்ப் பிறந்த'

(மேலாவித்யாதி) மேலேபரந்த வெய்யிலே நோக்குகைக்காக. "'வினதை சிறுவன்' என்றபடி எனதான்! ஆண்டாள்" என்றருளிச்செய்வர் வித்தராய்.

## 14-4. 'கார்த்தண் கமலம்'—

(கார்த்தண் கமலக்கண்ணென்னும்)...'மேகஶ்யாமம்' என்னும்படியிறே வடிவு தானிருப்பது. "கைகேயி வயிற்றிலே பிறந்த தாபமாறுங்கிடீர் குளிர்ந்த வடிவிலே விழிக்கப்பெற்றேனாகில்" என்கிறானென்றிறே அருளிச்செய்வது.

## 14-9. 'நாட்டைப் படையென்று'—

"அயன்றன்னைத் தந்த" என்று பாடமானபோது இவ்வருகுண்டான கார்யவர்க்கத்தையடைய நீயுண்டாக்கென்று சதுர்முகனைத் தந்தவென்றாகப்பெறில் அழகிது என்று போரவிநம்பி யருளிச்செய்வர். ... ... ...

ஸ்ரீ திவ்ய நிர்வாஹ ரத்னமாலையில் நாச்சியார் திருமொழி

வியாக்கியான ஸங்க்ரஹம் முற்றிற்று.

---

# பெருமாள் திருமொழி

## 2—4. 'தோய்த்த தண்டயிர்'—

(மெய்தழும்பத் தொழுது) ப்ராணமம் பண்ணினபடி தோற்ற உடம்பெல்லாம் தழும்பாகச் சிறியாத்தானைப்போலே யேத்தி.

## 4—10. 'உம்பருலகாண்டு'—

(ஏதேனுமாவேனே) அனந்தாழ்வான் இவ்விடத்துக்கு "திருவேங்கடமுடையான்றானுகவு மமையும்" என்னும்; அதுக்கு ஹ்ருதயமென்னென்னில்; சேஷபூதர் இரணுக்குப் புறம்பான சேஷியாகிலு மமையுமென்கை. அங்ஙனன்றிக்கே பட்டர் அருளிச்-

செய்யும்படி :—" நாமுமறிய வேண்டா, திருவேங்கடமுடையானுமறிய வேண்டா, என்
டாரு மறிந்து ச்லாகிக்கவும் வேண்டா ; திருமலையிலேயுள்ள தொரு பதார்த்தமாக
வமையும் " என்று.

## 5—1. 'தருதுயர்ம்தடாயேல்'—

(தருதுயரம் தடாயேல்)....முதலிகளெல்லாருங் கூடப் பெரிய திருமண்டபத்துக்
ஒருநாள் விசாரித்து எழுந்திருப்பர்களாயிற்று. ஒருநாள்
குக் கீழாக விருந்து ரஹஸ்யார்த்தங்கள் விசாரித்து பகவத் விஷயத்தில் ருசி பிறக்கைக் கடியென்
நித்ய ஸம்ஸாரியாய்ப் போந்தவனுக்கு பகவத் விஷயத்தில் ருசி பிறக்கைக் கடியென்
னென்று விசாரிக்கச் செய்தே, யாத்ருச்சிக ஸுக்ருதமென்ன, அஜ்ஞாத ஸுக்ருதமென்
னப் பிறந்தது ; அவ்வளவில் கிடாம்பிப் பெருமாளிருந்தவர் " நமக்கு பகவத் ஸமாச்ர
யணம் போலே ஸுக்ருததேவரென்றொருவருண்டோ ஆச்ரயணீயர் " என்றார்.
பிள்ளை திருநறையூரரையர், ஸுக்ருதமென்று சொல்லுகிற நீர் தாம் நினைத்திருக்கிறது
எத்தைக் காண் " என்றார். அதாவது — ஒன்றை ஆராயப் புக்கால் அதுக்கவ்வருகு
வேறொன்றின்றி யிருப்பதிறே—அடியாவது : யாதொன்று பலப்ரதமாம் அதிறே
உபாயமாவது; அல்லது நடுவே அநேகாவஸ்தை பிறந்தால் அவற்றினளவில் பர்யவஸியா
திறே. இளைப்பாறுவது. இதிலே சென்றிறே ; நடுவு இளைப்பாறுதிறே ; தருதுயர
மென்னாமிறே.

(தடாயேல்) ...... பிள்ளை திருநறையூரரையர், " ஒரு குருவி பிணைத்த பிணையல்
ஒருவரால அவிழ்க்க வொண்கிறதில்லை ; ஒரு ஸர்வசக்தி பிணைத்த பிணையை எலியெ
லும்பனான விவன் அவிழ்க்கவென்று ஒரு கார்யமில்லையிறே ; அவன் றன்னையே கால்கட்
டிப் போக்குமித்தனையிறே " என்றார்.

(மற்றவன் தன் அருள் நினைந்தே யழுங்குழவி) நம்பி திருவழுதி வளநாடு
தாஸரை முதலியாண்டான் கோபித்து, கையாலுங் காலாலுந் துகைத்து இழுத்த
வாறே திண்ணையிலே பட்டினியே யொருநாள் போகாதே கிடந்தார். ஆண்டான்
மற்றை நாள் அமுது செய்யப் புகுகிறார், " அவன் செய்ததென் " என்று கேட்டவாறே,
" பட்டினியே வாசலிலே கிடந்தான் " என்று கேட்டு அழைத்து " நீ போகாதே கிடந்
ததென " என்ன ; " ஒரு நாள் ஒரு பிடி சோறிட்டவன் எல்லாப்படியாலும் தள்ளிற்
தாலும் வாசல் விட்டுப்போகிறதில்லை, நான் எங்கே போவது " என்றார்.

## 5—4. 'வாளாலறுத்து'—

(அவதாரிகை)......பிள்ளை திருநறையூரரையரை, பிள்ளைகள் " புகை சூழ்ந்தபடி
ஸஹிக்கப் போகிறதில்லை " என்ன ; " சற்றுப் போதன்றோ வ்யஸநப்படுவது ; ஸ்ரீ
வைகுண்ட நாதன் திருவடிகளிலே ஸுகமேயிருக்கவன்றோ புகுகிறது " என்றாரிறே.

## 6—8. 'என்னை வருகவென'—

(என் சினம் தீர்வன் நானே) உஞ்சபிள்ளை பாடாநிற்க எம்பார் பார்த்தெழுந்
தருளியிருக்க இவ்விடத்துக்கு அபிநயிக்கிறார் :— காலாலே பாய்ந்து தள்ளுவதாகக்
காட்ட ; அது கண்டருளி, " கெடுவாய் ! அங்ஙனே செய்தானாகில் அவனுக்குப் பொல்
லாதோ, அவனுக்கு அதன்றோ தேட்டம், அங்ஙனன்று காணும்" என்று, கையையிட்டு
முகத்தை மறைத்துத் திரியவைத்தருளிக் காட்டினார்.

## 8—6. 'சுற்ற மெல்லாம்'—

(சுற்றமெல்லாம் பின்தொடரத் தொல்கானமடைந்தவனே) எல்லோரும்
போனார்களோ, சிறிதிடம்போய் மீண்டதென்றன்றோ சொல்லிற்று-என்ன ;—" அஹம்

ஸர்வம் கரிஷ்யாமி' என்று சொன்ன எல்லாவடிமையும் செய்யும் இளையபெருமாள் போகையாலே எல்லாப்ர்துக்களும் கூடப்போனார்களாய்த்திற்று" என்று எம்பெருமானார் அருளிச்செய்தருளினார்.

## திருச்சந்த விருத்தம்

### 81. 'கடைந்த பாற்கடல் கிடந்து' —

(உடைந்த வாலி தந்தனக்கு) "(தம்பி தனக்கு) மவ்வுக்கு ந ஆதேசமாய், தம்பி என்றதைத் 'தந்' என்று கடைக்குறைத்தலாய்க் கிடக்கிறது." என்று ஒரு தமிழன்.

## திருமாலை

### 1. 'காவலிற் புலனைவைத்து' —

(நின் நாமம் கற்ற)......நஞ்சீயர், "அப்ரயதனாய்க்கொண்டு திருநாமம் சொல்லலாமோ" என்று பட்டரைக் கேட்க; "கங்கா ஸ்நாநம் பண்ணப்போமவனுக்கு உவர்க்குழியிலே தோய்ந்து போக வேணுமோ, மேலுண்டான நன்மைகளைப் பண்ணிக் கொடுக்க வற்றானது கீழுள்ள அசுத்தியைப் போக்க மாட்டாதோ" என்றருளிச் செய்தார்.

### 2. 'பச்சை மா மலைபோல்மேனி' —

(கமலச்செங்கண்)..."விக்ரஹமில்லை, குணமில்லை, விபூதியில்லை" என்கிற சூந்யவாதிகள் ஸஞ்சரிக்கிற ஸம்ஸாரத்திலே இப்படி விக்ரஹத்தை ஆதரித்த இவர்கள் உத்தேச்யராகப் பெற்றோமே" என்று ஜீயரருளிச் செய்தார்.

### 7. 'புலையற மாகி நின்ற' —

(காண்பரோ கேட்பரோதான்)... ஆழ்வான், '[illegible] கூசிக்கிறவர்களோடேயிருந்து [illegible], எம்பெருமானார் சொன்ன வார்த்தையை அநுஸந்திப்பது.

### 8. 'வெறுப்பொடு சமணர்' —

(நின்பால் பொறுப் பரியனகள் பேசில்)...மஹாபலி, ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் பக்கலிலே சென்று, "எனக்கு ராஜ்ய ஸ்ரீ குறைந்து வாராநின்றது, இதுக்கு அடியென்" என்று கேட்க; "அஸுரர்களுக்காக தேவர்களை நெருக்கினாய், அவர்கள் ஸந்நிதியிலே சென்று ஆச்ரயிக்க அவர்கள் விருப்பார்த்தமாக அதிதி வயிற்றிலே புகுந்தருளினான், உன் ஐச்வர்யம் முடிந்தது காண்" என்ன; அவன் பகவந்நிந்தையைப் பண்ண; செவி புதைத்துக் கொண்டு "கெடுவாய்! என்முன்னே பகவந்நிந்தையைப் பண்ணினாய், என் தலையையறுத்தாயாகில் எனக்கு உபகரித்தாயாயிற்று, நீயிப்படி சொன்னதுக்காக ராஜ்ய ப்ரஷ்டனாவாய்" என்று சபித்தான்.

"விரக்தனானவன் ராஜ்யத்தை யொன்றாக நினைத்து இப்படி சபிப்பானென்" என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்க; "நாயைத் தண்டிக்கையாகிறது அது தின்கிற அமேத்யத்தை விலக்குகை யன்றோ" என்றருளிச் செய்தார்.

(போவதே நோயதாகி) திருநறையூரரையரைப்போலே ஸத்வப்ரசுரனாயிருந்தானாகில் அவன் நிந்தையே நோயாக முடிந்து போவது.

## 9. 'மற்றுமோர் தெய்வமுண்டே' —

(கழலிணை பணிமினீரே)...யயாதி இந்த்ரனோடே ஏகாஸநத்திலிருந்த வளவிலே, கர்மபூமியிலே புண்யகர்த்துக்களாய்ப் போருவா ராரோவென்ன; அஸத்யஞ் சொல்வ தாகாமெதன்னும் நினைவாலே "நான் வர்த்திக்கிற நாளிலே என்னைச் சொல்லுவார்கள்" என்ன; ஏகாஸநத்திலிருந்தது பொறாமையாலே ஆத்மப்ரசம்ஸை பண்ணினாயென்று, "த்வம்ஸ" என்று தலைகீழ்ப்படத் தள்ளினானென்று உண்டாயிருந்தது; வேதோப ப்ரும்ஹணார்த்தமாக ப்ரவர்த்தமான மஹாபாரதத்தில் இது என்ன வேதார்த்தஞ் சொல் லுகிறதென்று குறைப்பட்டிருக்குமென்ன; அவனே ஆச்ரயணீயனென்று மிவ்வர்த் தஞ் சொல்லுகிறதென்றருளிச் செய்தார்.

## 10. 'நாட்டினான் தெய்வமெங்கும்' —

(சேட்டைதன் மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கின்றீரே)...பகவத் ப்ரவண ரானவர்கள் தேவதாந்தரங்களை த்ரணீகரித்திறே யிருப்பது. "ருத்ரனைம் தேவியும் போகாநிற்க, பகவத்ப்ரவணனாயிருப்பானொருவன் அவர்களை யகற்றி தன் வஸ்த்ரத் தைக் குத்தினான்" என்கிறததை நினைப்பது. (திருமழிசைப் பிரான் திருவிருத்தம்)

## 11. 'ஒரு வில்லால்' —

(கஞ்சேவகனார்)...நஞ்சீயர் இப்பாட்டைக்கேட்டவன்று அநுஸந்தித் துப் போரா நிற்க, ஒரு ஸேவகனும் ஸ்த்ரீயும் விவாதம் பண்ணின வளவிலே அவனுக்கு இவள் சொன்ன வார்த்தையைக் கேட்டு வித்தரான வார்த்தையை யநுஸந்திப்பது; அதாகிறது - பிணங்கின வளவிலே உன்னால் என்னையென் செய்யலாம், ஏழைக்கும் பேதைக்கு மன்றோ சாமந்தனார் பத்திரங்கட்டிற் றென்றாள்.

பட்டரை ஆச்ரயித்த சோழசிகாமணி பல்லவராயர்க்கு "ராமஸௌமித்ரி குப்தா வா" என்கிற ச்லோகத்தை யருளிச்செய்து கடற்கரையில் வெறிமை தீர்த்திருக்கு மென்றத்தை யநுஸந்திப்பது. அத்தைக் கூடக்கேட்டிருந்த நஞ்சீயர் பின்னை விழுப் பரையரும நம்பி ஸ்ரீகோவாததன தாஸருமாக இதுக்கு சேர "துணைமறந்தெல்லா துணைமறநெஞ்சே" என்கிற பாட்டை யநுஸந்தித்தார்கள் [illegible] களான கூக்குரந் தநுசம் சக்ரவர்த்தித் திருமகனென்கை.

## 12. 'நமனும் முற்கலனும் பேச' —

பண்டு முத்கலனென்பானொருவன் பாபப்ரசுரனாய் [illegible] நவை தாகம் பண்ணுகிற ஸமயத்திலே, "கருஷ்ணாய" என்று [illegible] வனு டைய மரணதசையிலே யமபடர் வந்து நெருங்கி யமன் [illegible] யமன் தான இவனை யெதிர் கொண்டு ஸம்பாவிக்க, "உன்னு [illegible] நெருங் கிக் கொண்டுவர நீ ஸம்பாவியா நின்றாய், இதுக்கு ஹேது [illegible] டைய ப்ரபாவம் அவர்களுமறிந்திலர், நீயுமறிந்திலை, ஒருக்கால் திரு [illegible] நாமத்தைச் சொன னாய் காண்" என்று அத்தை ப்ரசமனிக்க; இவனை பரம [illegible] யமன வித்தை கரதாநுபவம் பண்ணுகிறவர்கள் கேட்ட வநந்தரம் அவன் [illegible] ப்ராப்ய பூமியாய்த் தென்று சொல்லிப் போருவதொரு கதையுண்டு; அதனை யநுபிக சொல்லு கிறது.

## 12. 'நமனும் முற்கலனும் பேச' —

(அவனதாரரங்கமென்னாது)...ஒருவனுடைய அந்திம ஸமயத்திலே திருமந்த் ரத்தையுபதேசித்து இத்தைச் சொல்லாயென்ன; அவனும "ஆமாகில் சொல்லிப் பார்க் கிறேன்" என்று இத்தை அநேகமுருச்சொல்லி அதுதன்னைச் சொல்லாதே செத்துப்

போனான். இரண்டும் அசுரமொத்திருக்கச் செய்தே சொல்லவொட்டிற்றில்லையிறே பாப பலம் என்றருளிச்செய்வர்.

## 18. ‘இனிதிரைத் திவலைமோத’ —

(கண்ணனை)...யசோதைப் பிராட்டி பிள்ளை மனங்கன்றாமல் தீம்பிலே கைவளரும்படி வளர்த்த மோசப்பெல்லாம் தோற்றியிருக்கும் பெரிய பெருமாளைக் கண்டால் என்றும், வஸிஷ்டாதிகளாலே ஸுசிக்ஷிதராய் வார்ந்து வடிந்த விநயமெல்லாம் தோற்றும்படியான சக்ரவர்த்தித் திருமகனை ஸ்மரிக்கலாம்படியிருக்கும் நம்பெருமாளைக் கண்டால் என்றும் பட்டரருளிச்செய்வர்.

## 19. ‘குடதிசை முடியைவைத்து’ —

(குணதிசை பாதம் நீட்டி) .... “ஆளவந்தார் திருவடிதொழ வெழுந்தருளினால் ‘துர்யோதகஸ்தாகம்’ என்று திருமுடிப் பக்கத்தில் ஒரு ப்ரதேசத்தில் ஒரு நாளுமெழுந்தருளியிருந்தறியார்; திருவாசலுக்குக்கிழக்கு எழுந்தருளியிராத ப்ரதேசமில்லை” என்று பட்டரருளிச் செய்வர்.

## 21. ‘பணிவினால் மனமதொன்றி’ —

(பவளவாயரங்கனார்க்கு — பணிவினால் மனமதொன்றி—துணிவினால் வாழமாட்டா) இவ்விஷயத்தை யநுபவிக்கைக்கு வ்யவஸாயமே யாய்த்து வேண்டுவது, “வ்யவஸாயார்த்தே ப்ரஹ்மங்ஙாஸாதயதி தத்பரம” என்று - ப்ரஹ்மப்ராப்திக்குக் கண்ணழிவற்ற ஸாதகம வ்யவஸாயமென்று உபதேசித்தானாய்த்து-தன்னாசார்யனான வேதவ்யாஸனில் காட்டில் புருஷார்த்த ஸாதநத்திலே தெளிவுடையனான ஜநகன்;

## 33. ‘மெய்யெல்லாம் போகவிட்டு’ —

(மெய்யெல்லாம்) .... ஜந்மவ்ருத்தத்தால் குறையநின்ற கைசிகன், “பகவத் விஷயத்திலே அவகாஹித்தாரில் பொய்சொல்லக் கடவாரில்லைகாண்” என்று தன்னை பக்ஷிக்க நினைத்த ப்ரஹ்ம ராக்ஷஸனைக் குறித்துச் சொன்னானிறே பகவத் விஷயத்திலே நாலடிவர நிற்கையாலே.

## 37. ‘தெளிவிலாக் கலங்கல் நீர்சூழ்’

(ஒளியுளார் தாமே யன்றே தந்தையுந் தாயுமாவார)...தம்மையொழிய வ்யக்த்யந்தரத்திலேயும் ஒரு பந்தமுண்டென்றாறி யிருக்கிறாரோ, “ஸர்வேஷா மேவலோகாநாம்” இத்யாதி. இச்சலோகந்தான, தர்மபுத்ராதிகள் வனவாஸம் பண்ணுகிற ஆபத்தசையிலே க்ருஷ்ணனும ஸத்யபாமைப பிராட்டியும் எழுந்தருள, அத்தைககேடட பராசராதி மஹர்ஷிகள் வந்து மார்க்கணடேய பகவானைக்கண்டு பேரோலக்கமாக விருக்க; தர்மபுத்ரன, “இவ்வாபததுக்காசவாஸ ஹேதுவாக எனக்கொரு நல்வார்த்தை யருளிச்செய்ய வேணும” எனறு ரிஷிகளைககேடக; அவர்கள் சொனனவையடங்க பூர்வபக்ஷித்து ஸ்ரீமார்க்கண்டேயபகவான் எழுநதிருந்து சொன்னதாயிருக்கு மிச்சலோகம். பின்பு சராமப்பிள்ளையுடைய ஆபத்தசையிலே பட்டர் அருளிச் செய்ததாயிருக்கும்

## 37. ‘தெளிவிலாக் கலங்கல் நீர்சூழ்’ —

(அளியன் நம்பையலென்னார்)...மணக்கால் நம்பி நம்மாணி திருமழிசைமாலையார் வனுக்குத் திறவெனரூரிறே. பிள்ளைப்பிள்ளையாழ்வான் தம்பி அப்பிள்ளையாழ்வான் வாயாலே “மாணி” என்னப்பெற்றானென்றாரிறே.

## 38. ‘மேம்பொருள் போகவிட்டு’ —

(உன் கடைத்தலையிருந்து)....திருக்கண்ணமங்கையாண்டான், ஒரு ஸம்ஸாரி, தன் வாசலைப்பற்றிக் கிடந்ததொரு நாயை நலிந்தவனை வெட்டித் தானும் குத்திக் கொண்ட

என்ன ; ஆற்றிலே யமிழ்ந்துகிறவன் ஒருகாலைத் தரையிலே யூன்றினால் பிழைக்கலாமோ வென்று கால்தாழ்க்குமாப்போலே, இவரும் பெரிய பெருமாளழகிலே யழுந்துகிறவராகையாலே திருமலையிலே கால்தாழ்ந்தார், அது மடுவாகிற தறிகிறிலர் ; வேறே சிலர், "பெரிய பெருமாளைப் பாடா நிற்க திருமலையிலே போவானென்" என்று அவரைக் கேட்க, ஒருவனைக் கவிபாடும் போது அவனுடைய வரத்து சொல்லியிறே கவிபாடுவது, பரமபதத்திலே நின்றும் ஸ்ரீமதுரையிலே தங்கி திருவாய்ப்பாடிக்கு வந்தாப்போலே ஸ்ரீவைகுண்டத்தினின்றும் திருமலையிலே தங்கிக்காண வந்தது" என்றருளிச்செய்தார்.

## 2. 'உவந்த வுள்ளத்தனாய்' —

(அன்று நேர்ந்த நிசாசரர்)—[ராமோ ராமோ ராம இதி] பாதம் தலைக்கட்டுகையாலே மீளுகிறதித்தனையென்றிறே நிர்வஹிப்பது.

## 3. 'மந்திபாய்' —

பின்னை அழகிய மணவாளரரையர், பெருமாள் திருவடிகளிலேபுக்கு "நாயன்றே! அடியேன் திருவேங்கட முடையானைத் திருவடி தொழுது வரவேணுமென்று நினையா நின்றேன்" என்று விண்ணப்பஞ்செய்ய; "வாரீர்! அமலனாதிபிரானை யொருக்கால் இசைசொல்லிக்காணீர்" என்று திருவுள்ளமாக; பின்னையும் ஒருக்கால் இசையை விண்ணப்பஞ் செய்யக் கேட்டருளி, இனிப்போகிலும்போம், இருக்கிலுமிருமென்று திருவுள்ளமானார்.

## 7. 'கையினார் சுரிசங்கனலாழியர்' —

(கையினாரித்யாதி) ... திருக்கோட்டியூரிலே அனந்தாழ்வான், பட்டரை "ஸ்ரீவைகுண்ட நாதன் த்விபுஜனோ சதுர்ப்புஜனோ" என்று கேட்க, "இரண்டுமழகியதே; த்விபுஜனாகில் பெரியபெருமாளைப் போலே யிருக்கிறது, சதுர்ப்புஜனாகில் நம்பெருமாளைப்போலே யிருக்கிறது" என்றார்.

(அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வியாக்கியானத்தில்)

(கையினார் சுரிசங்கனலாழியர்) ... பட்டர் திருக்கோட்டியூரிலே யெழுந்தருளியிருக்கிற காலத்திலே ஒரு விசேஷதிவஸத்திலன்று கோளரியாழ்வானைப் பார்த்து தெறகாழ்வார் சொன்னவார்த்தையை ஸ்மரிப்பது.

திக்கோட்டியூரிலே யெழுந்தருளியிருக்க அனந்தாழ்வான், பட்டரை, ஸ்ரீவைகுண்டநாதன் த்விபுஜனோ சதுர்ப்புஜனோ வென்று கெட்க ; சதுர்ப்புஜனாக வடுக்குமென்ன ; இரண்டிலும் அழகியதே தென்ன; த்விபுஜனாகில் பெரியபெருமாளைப்போலே யிருக்கிறது, சதுர்ப்புஜனாகில் நம் பெருமாளைப் போலே யிருக்கிறது என்றார்.

## 8. 'பரியனாகிவந்த' — (அழகியமண ...)

(நீண்ட) பெரியபெருமாளுடைய திருக் கண்களானவை திருச்செவியளவுஞ் செல்ல நீண்டிருக்கிற படிக்கு ஒரு நினைவுண்டென்கிறார் பட்டர். அதாவது—பெரிய பெருமாளுடைய திருக்கண்களானவை மீனுக்குத் தண்ணீர் வார்ப்பாரைப் போலே நித்யஸூரிகளுக்கு முகங் கொடுத்துக் கொண்டிருக்கிற ஸ்ரீவைகுண்டநாதனுக்கும் கண்களிரண்டாய், ராமக்ருஷ்ணாத்யவதாரம் பண்ணி குஹாதிகள் விதுராதிகள் தொடக்கமானார் சிலர்க்கு அல்பகாலம் முகம் கொடுத்து விஷயீகரித்து, வந்தாப்போலே வெறுங்கையோடே போனவர்களுக்கும் கண்ணிரண்டாய், ஸம்ஸாரங் கிழங்கெடுத்தா லல்லது எழுந்திரேனென்று கோயிலிலே அர்ச்சாரூபியாய் அவ்வவர் நிர்ஷங்களைப் பாராதே முகங் கொடுத்துக்கொண்டு கிடக்கிற பெரியபெருமாளுக்கும் கண்ணிரண்டாயிருக்கவோ, இவருடைய க்குறையைப் பார்த்தால் உடம்பெல்லாம் கண்ணாக வேண்

டாவோ வென்று பார்த்து, எல்லாமண்டலங்களும் தங்களுக்கே யாகவேணுமென்றிருக்கும் ராஜாக்கள், ஒருபடி தங்களுக்கு ப்ரத்யாஸந்நமான வன்னியரை யறியச் செய்யுமாப்போலே, பெரியபெருமாளுடைய அவயவாந்தரங்களடைய நாமே யாகவேணுமென்று, பூர்ச்சவஸ்துக்களாயிருக்கிற திருச்செவிகளாகையாலே அவற்றை வென்று அவ்வருகே போவதாக ஒருப்பட்டு அவற்றுடனே யகலவெறிகிருப் போலே யாயிற்றுத் திருக்கண்கள் செவிகளளவும் நீண்டிருக்கிறபடி. * 

## கண்ணிநுண் சிறுத்தாம்பு

(பெரியவாச்சான் பிள்ளை வியாக்யான அவதாரிகையில்.)

ஸ்ரீ பீஷ்மர் பக்கலிலே ஸகலார்த்தங் களையும் குறைவறக் கேட்ட தர்மபுத்ரன், "இவர் தமக் குத்தேச்யமாக ஸ்வீகரித்த தத்த்வஹிதங்களே நமக்குத்தேச்யம்" என்று நினைத்து, "கோ தர்மஸ் ஸர்வதர்மாணாம் பவதஃ பரமோ மதஃ" என்று கேட்க, "ஏஷமே ஸர்வதர்மாணாம் தர்மோதிகதமோ மதஃ" என்று தன்னுடைய ருசிபரிக்ருஹீதமான அர்த்தத்தை யுபதேசித்தானிறே.

த்ரிபுராதேவியாரை, "ப்ரமாண ப்ராபல்யத்தாலேயோ எம்பெருமானே யாச்ரயணியன் என்று நீங்கள் பற்றிற்று" என்ன; "அது வொன்றுமன்று, எம்பெருமானார் காடிச்சால் மூலையில் தேவதையை ஆச்ரயித்தாராகில், அதுவே யெங்களுக்குமாச்ரயணீய வஸ்துவாகக் கடவது" என்றாள்.

"அககஃ நித்யசத்ருக்ந" என்றதுக்கு ப்ரயோஜன மென்னென்னில், "ஸ்ரீசத்ருக்நாழ்வான் பெருமாளுக்கு நல்லனானபடி, அவனையல்ல தறியாத ஸ்ரீபரதாழ்வானையல்லது வேறொன்றறியாதபடி யானான்" என்று எம்பெருமானார் அருளிச் செய்தார்.

### 1. 'கண்ணிநுண் சிறுத்தாம்பு'

("கண்ணிநுண் சிறுத்தாம்பினால்,-) இவன் றன்னைக் கட்டுவது, "ஒரு பெண்ணைக் களவு கண்டான், ஊரை மூலையடியே நடத்தினான்" என்றிறே; "'இவன் பொமாங்யன்' என்று இடுமீடெல்லாம் இடுங்கோன்" என்றிருந்தான்.

(தென்குருகூர் நம்பி) "ஆசார்யர்களை 'நம்பி' என்னக் கற்பித்தார் ஸ்ரீமதுரகவிகளிறே" என்று ஜீயரருளிச்செய்வர்.

### 2. 'நாவினால் நவிற்றின்பம்'

(அவன் பொன்னடி-மேவினேன்) ஒரு புருஷகார புரஸ்ஸரமாகவன்றிக்கே நிரபேக்ஷமாக ஆச்ரயித்தேன். இங்கே, ஜீயர் வார்த்தையை யநுஸந்திப்பது.

(நாவினால் நவிற்றின்ப மெய்தினேன் மேவினேனவன் பொன்னடி) இத்தைப் பின்சென்றிறே ஆளவந்தாரும், ஆசார்ய விஷயத்தை "அத்ர பரத்ராபி நித்யம் யதீய சரணௌ சரணம் மதீயம்" என்றது.

### 3. 'திரிதந்தாகிலும்'—

(அவதாரிகை) த்ரிபுராதேவியார், "வடகீழ் மூலையில் தத்வத்தையும் 'ஆச்ரயணீயம்' என்று உடையவ ரருளிச்செய்தாராகில் எனக்கும் அதுவாமத்தனையன்றோ" என்றாள்.

குணமலைப்பாடியுடையார், காங்கேயன் தெற்கேயெடுத்துவிட்டபோது பிள்ளையாத்தானங்கே குறைவறப்புச் சமைக்க, அவர் "உமக்கு வேண்டுவதென்" என்று கேட்க, இவர் "உம்மைக்கொண்டு பண்டேயுபகாரங் கொண்டோங்காணும்" என்ன; ஆவதென், என்னையறியாதே வருவதோருபகாரமுண்டோ" என்ன; "எங்களாசார்யர், 'நான் கோயிலில் மண்பெற்றது அவ்வேளாளனாலே' என்றருளிச்செய்யக் கேட்டிருந்தோம், இதுக்கு மேற்பட்டதோருபகாரமுண்டோ நமக்கு" என்றார்.

உடையவர் வெள்ளை சாத்தியெழுந்தருளினகாலத்திலே, திருவடிகளில் ஸம்பந்தமுடையாரை "பெருமாளைத் திருவடித் தொழவேண்டா" என்று விலக்க, ஆழ்வானை "நீராரேனுக்கும் விரோதியோ, நீர்புக்குத்திருவடி தொழலாகாதோ" என்ன; "ஆத்மகுணம் மோக்ஷஹேதுவென்றிருந்தோம், அது பந்தஹேதுவான பின்பு எம்பெருமானார் திருவடிகளில் ஸம்பந்தத்தை யறுத்துக் கொள்ளவோ" என்று மீண்டுபோந்தார்.

## 4. 'நன்மையால் மிக்க'—(அழகியமணை...)

(நன்மையாலித்யாதி)...நன்மையால் மிகுதியாவது - "அபகாரிஷ்வபி ஸதா ஸாதஸ் ஸாத்வேவ வர்த்ததே" என்கிறபடியே - அந்த அபகார ப்ரரளவிலும் உபகாரகனாய்ப்போருகை. அதாகிறது - அவர்களளவில் குறைகாணுதொழிகையிறே, இப்படியிருக்கிறவர்களாகிறார் - பிராட்டி. கூரத்தாழ்வான் போல்வார்களிறே. ஏகாக்ஷி, ஏககர்ணி தொடக்கமான ராக்ஷஸி வர்க்கம் ஓவாமலிருந்து தர்ஜந பர்த்ஸநாதிகள் பண்ணியிருக்கச் செய்தேயும், "இவர்களை நலியவேணும்," என்ற திருவடியோடே மறுதலைத்து, "கார்யம் கருணமார்யேண" என்றாப்போலே ஐந்த்ர வ்யாகரண பண்டிதனான நீ, பின்னையும் உன் ஜந்மம் விடாமல் வார்த்தைசொன்னாய், இவர்களுடைய கண்ணநீர் கண்டால் கற்றவனால் கருணை பண்ணவன்றோ வடுப்பது, நாட்டில் குற்றம் செய்யாமலிருக்கிறார் ஆரேனுமுண்டோ, இவர்கள் தாம் குற்றஞ் செய்யிலன்றோ இவ் விசாரம் வேண்டுவது, அவர்கள் ஏதேனும் வித்யதிக்ரமம் பண்ணினார்களோ; நீ கற்ற பரப்பில் 'நாயன் சொன்னது அடியான் செய்கை குற்றம்' என்று ஒரு வசனங் கிடந்ததோ? இவர்கள் ராவணன் பரிகரமாய் அவனுக்குக் கைவழிமண்ணான வடியாருமாய் அவனுடைய ஆஜ்ஞாபரிபாலனசீலைகளுமாகா நின்றால் அவன் சொன்னத்தை மறுக்கலாமோ; பெருமாள் உன்னை என்னைக் கண்டுவரவென்று விட்டாரோ; ஸ்தரீவதம் பண்ணிவர வென்றுவிட்டாரோ; அப்படியே சொன்னாரகில் அவர் குற்றமாகிறது, நீ சொன்னாயாகில் அந்த வித்யதிக்ரமம் உன்னதாகிறது" என்று குணக்ரஹணம்பண்ணி ராக்ஷஸிகளை ரக்ஷித்தாளிறே பிராட்டி. ஆகையாலிறே இவள் கோஷ்டியைப்பற்ற ராமகோஷ்டி லகுதரையாயிற்று. அவயவங்களிலே ஹாநி பிறக்கும்படி அபசாரம் பண்ணின நாலூரானும், "நான் புக்கலோகம் புகவேணும்" என்றிறே ஆழ்வானபேக்ஷித்தது.

(என்னையாண்டிடும்) "'பொலிந்து நின்றபிரான் பக்கலிலும் ஒருக்கால் போய் வாரீர்' என்று உபதேசித்தார்" என்று பிள்ளையருளிச்செய்வர்.

## 11. 'அன்பன்றன்னை'—

(சொன்னசொல் நம்புவார் பதி வைகுந்தம் காண்மினே) ... நம்பிதிருவழுதி வளநாடு தாஸர், "'நம்புவார்பதி வைகுந்தம்' என்று - அவர்களிருந்த தேசங்காண் பரமபதம்" என்று சொல்லுவர். "உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகும் தம்மூரெல்லாம்" என்னக்கடவதிறே. "கூரத்தாழ்வான் மகன் பிறந்தபின்பு ஸம்ஸாரமும் பரமபதமும் இடைச்சுவர் தள்ளி யொருபோகியாயிற்றுக்காண்' என்று பெற்றி பணித்தார்" என்று பிள்ளை யருளிச்செய்வர். ... ... .... *

முதலாயிர வியாக்கியானம் பூர்த்தியாக

**ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலை**

முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்—ஜீயர் திருவடிகளே சரணம்.